# கல்கி



முகமா முக்கியம்?
- ராஜ்கிரண் பேட்டி

KALKI 11.7.93
ரூ. 3.00

# அடுத்த பிரதமர்?

# சில குழந்தைகள் மற்றவர்களை விடத் துறுதுறுவென இருப்பது ஏன்?

துறுதுறுவென இருப்பதற்குத் தேவையான சக்தியைப் பெறுவதற்கு, உங்கள் குழந்தைக்குச் 'சரியான' கலோரிகள் தேவை. புரோட்டீன்களும், கார்போஹைட்ரேட்டும், கொழுப்புச் சத்தும் சரியான சமச்சீர் விகிதத்தில் கலந்திருந்தால்தான் இந்தக் கலோரிகள் கிடைக்கும்.

இந்தச் 'சரியான' கலோரிகள் கிடைக்க வேண்டுமானால் அதற்குச் சிறந்த வழி ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த உணவைக் கொடுக்க வேண்டும்.

உங்கள் டாக்டரிடம் கேளுங்கள் சொல்லுவார். உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆன பிறகு பால் மட்டுமே போதாது. ஒவ்வொரு வேளையும், ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வாரமும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவை உங்கள் குழந்தைக்குத் தர வேண்டும்.

பெரும்பாலான தாய்மார்களுக்கு இது முடிவதில்லை. வழக்கமான உணவு வகைகள் சரிப்பட்டு வருவதில்லை.

பிறகு என்னதான் வழி ?

ஸெரிலாக். ஏனெனில் புரோட்டீன்கள் செறிந்துள்ள பால், கோதுமை இரண்டுமே இதில் உள்ளன. மேலும், கார்போஹைட்ரேட்ஸ், கொழுப்புச் சத்து, மினரல்கள், இரும்புச் சத்து, கால்சியம் ஆகியன சரியான அளவில் கலந்த உணவு ஸெரிலாக். வைட்டமின்கள் A, D, E, B-காம்ப்ளெக்ஸ் மற்றும் C இதற்கும் பலம் சேர்க்கின்றன. ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவு ஸெரிலாக்.

இன்னுமொரு சிறப்பு, ஸெரிலாக் இப்போது நெஸ்லேவின் புரட்சிகரமான புதிய Z-லைன் [illegible] முறைப்படி தயாரிக்கப்படுகிறது. இதனால் தானியங்கள் எளிதில் ஜீரணமாவதற்காக முன்கூட்டியே பக்குவப்படுத்தப்படுகின்றன. ஸெரிலாக் மிக எளிதில் ஜீரணமாகி விடுகிறது. மிருதுவாகவும், சுவையாகவும் இருக்கிறது.

எனவே, உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் ஸெரிலாக் கொடுங்கள். ஏனென்றால், இதில் 'சரியான' அளவு கலோரிகள் உள்ளன. ஏனென்றால், உங்கள் குழந்தை துறுதுறுவென இருப்பதற்குத் தேவைப்படும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவு இது.




**உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்**

முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மிகவும் சிறந்தது. குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் தாய்ப்பாலுடன் கூடவே தானிய உணவு வகைகளைக் கொடுங்கள்.

Mudra NES 0600 TML

# ‘ஒரு கோடி’ ஊழல் ஜோக்ஸ்

கருத்து: ராஜிராதா
படம்: செல்வம்











# கருவின் குற்றமா? கலைஞர் குற்றமா?

நாஞ்சில் மனோகரன் தி.மு.க.விலிருந்து விலக்கப்பட்டதற்குக் 'கருவின் குற்றம்' என்ற தலைப்பில் அவர் எழுதிய கவிதை மட்டும்தானா காரணம்? அவர் வருத்தம் தெரிவிக்க, அவரது விலக்கம் பற்றி மறுபரிசீலனை செய்யப்படுவதற்கு என்ன காரணம்? விளக்குகிறது இந்தக் கட்டுரை...

"நீலத் திரை கடலோரம்; அங்கே நித்தம் தவம் செய்யும் குமரி; ஆழ்கடலில் மூழ்கினேன். கைநிறையக் கிளிஞ்சல்களும், சிப்பிகளும் கிடைத்தன. அதில் கண்ணைப் பறிக்கும் முத்து ஒன்று பளிச்சிட்டது. அந்த முத்து குமரி மாவட்டத்தில் நமக்குக் கிடைத்த சொத்து. அந்தச் சொத்துதான் நாஞ்சில் மனோகரன்!" என்று ஒருமுறை காஞ்சிபுரத்தில் நடைபெற்ற பொதுக் குழுவில் சொன்னார் அண்ணா.

மனோகரனுக்குப் பூர்வீகம் கேரளா தான் என்றாலும் வளர்ந்தது, படித்தது எல்லாம் நாகர்கோவிலில் தான். அப்பா தீவிர முருக பக்தர். ஆனால் பள்ளிப் பருவத்திலேயே, பெரியாரின் பகுத்தறிவுப் பாசறையில் நுழைந்து விட்டவர் மனோகரன். 1944-ம் வருடம், பெரியார் கோட்டாறு பகுதியில் ஒரு கூட்டத்தில் பேசும் போது, பள்ளி மாணவனான மனோகரனும் பேசினான். அந்த பேச்சால் கவரப்பட்ட பெரியார், அடுத்த மாவட்டங்களிலும் பேச மனோகரனை உடன் அழைத்துச் சென்று விட்டார். பின்னர் சிறிது காலம் கம்யூனிஸ இயக்கத்தில் ஈடுபாடு கொண்டு, மறைந்த ஜீவானந்தத்தின் சிஷ்யராகவும் இருந்திருக்கிறார் மனோகரன்!

இப்படி அரசியல் ஈடுபாடுகள் ஒரு பக்கம் இருந்தாலும், மனோகரனது படிப்பை அது பாதிக்கவில்லை. நாகர்கோவிலில் இளங்கலையில் பட்டம் பெற்று, பின்னர் பொருளாதாரத்தில் முதுகலைப் பட்டம் பெற சென்னை பச்சையப்பன் கல்லூரியில் சேர்ந்தார். திராவிட இயக்க இளைஞர்களின் பாசறையாக இருந்த பச்சையப்பாவில் முத்தாக ஒளிவீசினார் மனோகரன்.

துவக்க காலத்து தி.மு.க.வில், படித்த இளைஞர்கள் சேரத் தயங்கினார்கள். அந்த நிலையில் மனோகரன் போன்ற ஆங்கிலம் தெரிந்த இளைஞர்களுக்குக் கட்சியில் மவுசு கூடிற்று. அதனால்தானோ என்னவோ தி.மு.க.வின் முதல் மாநாட்டின் போது, மாநாட்டுச் செயலாளராக மனோகரன் நியமிக்கப்பட்டார். 'நாஞ்சிலாரின் மேடைப் பேச்சு, அலங்கரிக்கப்பட்ட பட்டத்து யானை ராஜபாட்டையில் பவனி வருவது போன்றது' என்று ஒருமுறை குறிப்பிட்டார்

கலைஞர்.

நாகப்பட்டினம் பாராளுமன்றத் தொகுதியில் 1957-ல் முதன் முதலாக நின்று தோற்றாலும் 1962ல் தென் சென்னைத் தொகுதியில் வெற்றி பெற்றதிலிருந்து மனோகரனுக்கு டில்லி வாசம் (77 வரை) தொடர்ந்தது. எந்த வடநாட்டுத் தலைவர் பெயரைக் குறிப்பிட்டாலும் அவருக்கும் தமக்கும் உள்ள தொடர்பைச் சொல்லி மகிழ்வார் மனோகரன். அந்த அளவுக்குக் கட்சி வேறுபாடின்றி எல்லோருடனும் பழகியவர் மனோகரன். எம்.ஜி.ஆர். தி.மு.க.வில் இருந்து பிரிந்தவுடன் மனோகரனும் கலைஞரைக் கை கழுவினார். 1977-ல் அ.தி.மு.க. அமைச்சரானார். ஆனால் 1979ல் அ.தி.மு.க. பாராளுமன்றத் தேர்தலில் தோற்ற பிறகு, எம்.ஜி.ஆரைக் கைகழுவி கலைஞருடன் இணைந்தார். 1989-ல் தி.மு.க. அமைச்சரவையில் அமைச்சரானார்.

தமிழ்நாட்டில் கையில் கோல் வைத்திருக்கும் பிரமுகர் ஆளுனர் சென்னாரெட்டிக்கு முன்பிருந்தே இவர் மட்டும்தான். இதனால் 'மந்திரக் கோல் மைனர்' என்ற செல்லப் பெயரும் இவருக்குண்டு. 'இவர் மேனா மினுக்கி அரசியல்வாதி; தொண்டர்கள் பலமில்லாதவர்' என்றெல்லாம் இவரைப் பற்றிச் சொல்லப்படுவதுண்டு. அந்தக் காலத்தில் நடிகனாக இருந்த எஸ்.எஸ்.ஆர். மேடைகளில் பேச வரும் போது, எந்தவித மேக்-அப்பும் இல்லாமல் வருவாராம். ஆனால், மனோகரனோ எப்போதும் சகல மேக்-அப்போடு கமகமவென்றுதான் வருவார். அண்ணா இதைச் சொல்லிச் சொல்லி, கிண்டலடிப்பாராம்.

கொஞ்ச காலமாகவே, கலைஞருக்கும் மனோகரனுக்கும் லடாய் என்று அரசல் புரசலாகச் செய்திகள் வந்தபடிதான் இருந்தன. தி.மு.க. சென்ற தேர்தலில் தோற்ற பிறகு கூடிய பொதுக் குழுவில், கோ.சி. மணி போன்றவர்கள் வை. கோ.வைக் கட்சியை விட்டு நீக்க வேண்டும் என்று குரல் கொடுத்த போது, அதை எதிர்த்தவர் மனோகரன்தான். இதனால் ஸ்டாலினுக்கு எதிராக உள்ள கோஷ்டியில் சேர்க்கப்பட்டார்! தி.மு.க. அறக்கட்டளையில் மதுராந்தகம் ஆறுமுகத்தைச் சேர்த்ததையடுத்து, 'கருவின் குற்றம்' என்ற தலைப்பில் தினகரனில் கவிதையொன்று எழுதினார் மனோகரன்.

''நானேதான், நாளும் நான், நானே எல்லாம்'' என்ற வரி, கலைஞர் கழகத்தைத் தம் குடும்பம் போல் நடத்துவதைக் குறிப்பது என்று ஸ்டாலின் ஆதரவாளர்கள் கோள் மூட்டி விட, விளக்கமளிக்க எந்த வாய்ப்பும் கொடுக்கப்படாமல், சர்வாதிகார முறையில் மின்னல் வேகத்தில் நீக்கப்பட்டார் மனோகரன்!

இதில் வேடிக்கையென்னவென்றால் கவிதையை வெளியிட்ட 'தினகரன்' பத்திரிகை நிறுவனரும், தி.மு.க. ஆட்சியில் அமைச்சராக இருந்தவருமான கே.பி. கந்தசாமியின் மீது எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை என்பதுதான்! ''ஆக மனோகரன் நீக்கப்பட்டதற்குக் கவிதை ஒரு காரணமாகத்தான் கூறப்படுகிறது. உண்மையான காரணம், வாரிசாக வர விரும்புபவருக்கு அவர் சவாலாக இருப்பதுதான்'' என்றார் நடுநிலையான கட்சித் தொண்டர் ஒருவர்.

அப்புறம் எதற்காக மனோகரனின் நீக்கம் குறித்த மறுபரிசீலனை? 'இனி மனோகரன் என்ன செய்வார்? வை. கோ. போன்றவர்களை இணைத்துக் கொண்டு பெரிய அளவில் தி.மு.க.வில் பிளவை உண்டாக்குவாரா? அல்லது, திருநாவுக்கரசுடன் எம்.ஜி.ஆர். தி.மு.க.வில் சேர்ந்து, அதன் அலங்காரத் தலைவர் ஆவாரா? அல்லது அ.தி.மு.க.வில் சேர்ந்து தமிழக அரசின் டில்லிப் பிரதிநிதி பதவியைப் பெறுவாரா என்றெல்லாம் அரசியல் வட்டாரத்தில் பரவலாகப் பேசப்பட்டதுதான் காரணம்.

ஆக, உட்கட்சிப் பூசல் வலுத்துக் கொண்டிருக்கும் நிலையில் மனோகரனின் இழப்பு உண்மையிலேயே கட்சிக்கு இழப்புத்தான் என்பதைத் தி.மு.க. இப்போதாவது மனப்பூர்வமாக உணர்ந்து கொண்டிருந்தால் சரிதான்!

– கௌசல்யா

படம் : ஸ்கார்ப் நியூஸ்

அடுத்த இதழில் :

- மாமியார் – மருமகள் மனோதத்துவம்....
- அழவைக்கும் அட்மிஷன் பிரச்னை!

– காலேஜ் வட்டாரச் செய்திகள்

# அத்வானி: அடுத்த பிரதமர்?

பி.ஜே.பி. ஆட்சிக்கு வந்தால் இந்தியாவின் நிலைமை எப்படியிருக்கும்? சிறுபான்மையினரின் அச்சம் தொடர்ந்து கொண்டேதான் இருக்குமா? அவர்களின் பொருளாதாரக் கொள்கை என்ன? பல்வேறு அரசியல் பிரமுகர்களிடமும் விவாதித்து எழுதப்படுகிறது இந்தக் கட்டுரை...



* வாழப்பாடி ராமமூர்த்தி



* பண்ருட்டி ராமச்சந்திரன்

"ஊழலில்லாத நிர்வாகம்; கடனில்லாத பொருளாதாரம்; வன்முறை இல்லாத தேர்தல்கள்; கலவரங்கள் இல்லாத சூழல்; இதுவே நாங்கள் கொண்டு வர விரும்புவது" - அத்வானி.

'கல்யாண ஏற்பாடுகள் எல்லாம் தயார். நல்ல பையனாகக் கிடைத்தால் உடனே முகூர்த்தம் வைத்துவிட வேண்டியதுதான்' என்று சில பெண்களின் பெற்றோர்கள் சொல்வார்கள். இன்று பாரதிய ஜனதா கட்சியின் நிலையும் அதுதான். மத்தியில் ஆட்சியைப் பிடிக்கத் தயாராக நிற்கிறது. அதற்காகவே அத்வானியைத் தலைவராகத் தேர்ந்தெடுத்திருக்கிறது. தேர்தல் வர வேண்டியதுதான் பாக்கி. அதுவும் ஹர்ஷத் மேத்தா விவகாரம் வந்து காங்கிரஸையும் பிரதமரையும் ஓர் உலுக்கு உலுக்கிக் கொண்டிருக்கும் நிலையில், பாரதிய ஜனதாவுக்குக் காங்கிரஸே ஆட்சியைத் தாரை வார்த்துக் கொடுக்கும் சூழல் உருவாகி விட்டது என்றே மக்களில் பலரும் சொல்கிறார்கள். போதாததற்கு ஜனதா தளம் இன்னமும் அவிழ்த்துக் கொட்டிய நெல்லிக்காய் மூட்டையாகத்தான் இருக்கிறது என்பதால் பா.ஜ.க. மிகவும் நம்பிக்கையோடு இருக்கிறது.

சமீப காலமாகச் சில பிரபல நிறுவனங்கள் எடுத்த கருத்துக் கணிப்புப்படி,

பா.ஜ.க. தனிப் பெரும் கட்சியாக அடுத்த தேர்தலில் வெற்றி பெறும் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. அப்படியே மெஜாரிட்டிக்குக் கொஞ்சம் பற்றாக்குறை இருந்தாலும் அதை ஜெயலலிதாவும், என்.டி.ஆரும் (ஆச்சரியப்பட வேண்டாம். இதற்கான ஒட்டு வேலைகள் ரகசியமாக நடந்து கொண்டிருக்கின்றன!) சரிக்கட்டி விடுவார்கள் என்று பா.ஜ.க. தீர்மானமாக நம்புகிறது.



* அப்துல்சமது

சொல்லப் போனால், பா.ஜ.க.வைப் பொறுத்தவரை, அதிகார பீடத்திற்கான கதவு 1986லேயே திறக்கப்பட்டு விட்டது. ஆம்! அப்போதுதான் பூட்டியிருந்த பாபர் மசூதியின் கதவுகளும் திறக்கப்பட்டன! 1984 தேர்தலில் இரண்டே இரண்டு மக்களவை இடங்களைப் பெற்றிருந்த பா.ஜ.க.வினர் யோசித்தனர். கொள்கைகள், கோட்பாடுகள் என்று பேசி வோட்டு வாங்குவதை விட, மக்களின் மத உணர்வுகளைத் தூண்டி வோட்டு வாங்குவது சுலபம் என்று தீர்மானித்தனர்; வெற்றிப் படிக்கட்டுகளில் ஏறுவதற்காக ராமர் துணைக்கழைக்கப் பட்டார். 1989-ல் ஜனதா தளத்துடன் தொகுதி உடன்பாடு வைத்துக் கொண்டு, 86 இடங்களைப் பெற்றது.

பின்னர் வி.பி.சிங் ஆட்சியில் மண்டல் கலவரங்கள் வெடிக்க, அத்வானி ஸோமநாத்திலிருந்து அயோத்திக்கு ரத யாத்திரை கிளம்ப, ராஜீவ் காந்தி கொலையுண்ட அனுதாப அலையையும் மீறி, அடுத்த தேர்தலில் 119 இடங்களை அறுவடை செய்தது பா.ஜ.க.

''வரும் நவம்பரில் கண்டிப்பாக பாராளுமன்றத்துக்குத் தேர்தல் வந்தேயாக வேண்டும். செங்கோட்டையில் அத்வானிஜி கொடியேற்றும் நாள் வெகு தொலைவில் இல்லை'' என்றார் சங்கக் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர். தலைவர்கள் நிலையிலும், தங்கள் கட்சி



* ஜனா கிருஷ்ணமூர்த்தி



* ஆலடி அருணா

# தமிழ்நாட்டுப் பெண்களுக்கு அரசியல் விழிப்புணர்ச்சி என்பதே கிடையாது!



அண்மையில் பாரதிய ஜனதா கட்சியில் சேர்ந்த நடிகை லட்சுமி கூறுகிறார் :

● 'இருபத்தைந்து வருஷங்களாக சினிமாவில் உட்கார்ந்து கொண்டு என்ன கிழித்தாய்?' என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். நான் சார்ந்திருக்கிற சமூகத்திற்கு ஏதாவது செய்தாக வேண்டும் என்கிற உந்துதலினால்தான் அரசியலுக்கு வந்தேன்.

● அரசியலுக்கு வரவிரும்பியதால் நான் பி.ஜே.பியைத் தேர்ந்தெடுக்கவில்லை; பி.ஜே.பி என்றொரு கட்சி இருப்பதனால்தான் நான் அரசியலுக்கு வரவே முடிவு செய்தேன்.

● போன ஜென்மத்தில் சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொண்டிருந்தேனோ என்னவோ, சின்ன வயதிலிருந்தே சமூக அக்கறை என்பது என் ரத்தத்தில் ஊறின ஒன்றாகவே இருந்து வந்திருக்கிறது.

● தமிழகப் பெண்களுக்கு அரசியல் விழிப்புணர்வு என்பதே இல்லை. உப்பு, புளி, மிளகாயும் ரேஷன் கடை பாமாயி

ஆட்சியைப் பிடித்து விடும் என்ற நம்பிக்கை பூரணமாக இருக்கிறது. அதன் காரணமாகத் தான் சமீப காலமாக, 'நாங்கள் ஆட்சிக்கு வந்தால்' என்ற பாணியில் பா.ஜ.க.வினர் பேச ஆரம்பித்திருக்கிறார்கள். ''நாங்கள் ஆட்சிக்கு வந்தால் எல்லா மக்களுக்கும் பொதுவான ஆட்சி அமைப்போம்'' என்று தாம் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு பெங்களூரில் அத்வானியும் முழங்கியிருக்கிறார்!

''மக்கள் மத்தியிலும் காங்கிரஸுக்கு மாற்று பா.ஜ.க.தான் என்கிற எண்ணம்தான் உருவாகிக் கொண்டிருக்கிறது. இந்த நிலையில், இவர்கள் ஆட்சிக்கு வந்தால் நாடு எப்படியிருக்கும்?'' என்று பண்ருட்டி ராமச்சந்திரனிடம் கேட்டோம்.

''மாவுக்கேற்ற பணியாரம்; அதைப் போல் கட்சியின் தன்மைக்கேற்பத்தான் அதன் ஆட்சியும் இருக்கும். இந்தியாவில் உள்ளது போன்ற பன்மைச் சமுதாயத்தைக் கட்டிக் காக்க, சமத்துவமும், சம வாய்ப்பும், சம வாழ்வுமே அடிப்படை. இந்திய அரசியல் சட்டமும் இதையே வலியுறுத்துகிறது. பா.ஜ.க., ஆர்.எஸ்.எஸ்.ஸின் கைப்பாவை. வாஜ்பாயோ, அத்வானியோ அங்கு முடிவெடுக்கும் உரிமை கொண்டவர்கள் அல்லர்; எதையும் ஆர்.எஸ்.எஸ்.தான் நிர்மாணிக்கும். இந்த நிலையில் இந்தியாவை இந்துக்கள் நாடு என்று அவர்கள் சொல்லும் போக்கு, காஷ்மீரில் உள்ள முஸ்லிம்களையும், பஞ்சாபில் உள்ள சீக்கியர்களையும், வடகிழக்கில் உள்ள கிறிஸ்தவர்களையும் அந்நியப்படுத்தி, வேண்டாத விளைவுகளை ஏற்படுத்தும்'' என்று சொல்கிறார் பண்ருட்டி ராமச்சந்திரன்.

சமீப காலம் வரை பா.ஜ.க.வின் துணைத் தலைவராக இருந்த ஜனா கிருஷ்ண மூர்த்தி இதனை மறுக்கிறார். ''பா.ஜ.க. ஒரு தேசியக் கட்சி. ஜனசங்கமாக இருந்த காலத்திலிருந்தே நாட்டின் ஒற்றுமை, ஒருமைப்பாடு ஆகியவற்றில் முழு நம்பிக்கையோடு செயல்பட்டு வருகிறது. இன்றும் எங்கள் கட்சியின் வரலாற்றை எடுத்துப் பார்த்தால் காஷ்மீர், பஞ்சாப் மாநிலங்களில் - ஒற்றுமைக்காக - ஒருமைப்பாட்டை வலியுறுத்துவதற்காக எங்கள் கட்சியினர் உயிர் விட்டிருப்பது தெரியவரும். முஸ்லிம்களையோ, கிறிஸ்துவர்களையோ வெறுக்கும் கட்சி அல்ல பா.ஜ.க. எங்கள் கட்சியின் செயல்பாடுகளில் ஆர்.எஸ்.எஸ். தலையிடுகிறது என்பதும் சரியல்ல; சொல்லப் போனால் நாங்கள்தான் அவர்களை அடிக்கடி தொந்தரவு செய்கிறோம்'' என்கிறார் அவர்.

''தமிழக காங்கிரஸ் தலைவர் வாழப்பாடி ராமமூர்த்தி இதை மறுக்கிறார். 'பசிக்கு ரொட்டி; பண்புக்கு ராமன்!' இது தான் சென்ற தேர்தலில் பா.ஜ.க. வைத்த

ஓரமே உலகம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலை மாற வேண்டும்; மாற்றுவதற்காகத்தான் நான் அரசியலுக்கு வந்தேன்.

● ஒரு தலைவர் என்பவர் அனைவராலும் எளிதில் அணுகக் கூடியவராக இருக்க வேண்டும். இன்று இங்கே இருக்கிற தலைவர்களெல்லாம் தம்மைக் கடவுள்களாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அத்வானியை எனக்கு 1977 லிருந்து தெரியும். அவரது எளிமை வேறு யாருக்கும் வராது.

● பி.ஜே.பியை மதவாதக் கட்சி என்று கொச்சைப்படுத்துவது தவறு. இந்த நாடே ஹிந்துக்களின் நாடுதான்! அப்படி இருக்கையில், ஹிந்துத்துவத்தைத் தனது கொள்கைகளின் அடிப்படையாக வைத்துச் செயல்படுவதில் என்ன தவறு?

● ராவின் நிலையைப் பாருங்கள். இனி அந்த 'ராம்' வந்தாலும் 'ராவை'க் காப்பாற்ற முடியாது!

சந்திப்பு : பா. ரா.

கோஷம். இவர்கள் அடிக்கடி, பண்பாடு, பாரம்பரியம் என்று பேசுகிறார்களே அது என்ன? 'இந்துத்வ பண்பாடு, பாரம்பரியம்' என்பார்கள். மதத்தாலும் மொழியாலும் கிட்டத்தட்ட இருபது கோடி சிறுபான்மையினர் உள்ள இந்த நாட்டின் சிறப்பே வேற்றுமையில் ஒற்றுமை காண்பதுதான். ஆனால் மெஜாரிட்டி சமுதாயத்தினரின் வோட்டுக்களைப் பெறுவதற்காகச் சிறுபான்மையினரைத் தூற்றுகிறார்கள். எனவே இவர்கள் ஆட்சிக்கு வந்தால், மெஜாரிட்டி சமூகத்துக்குக் கொடுக்கும் மதரீதியான வாக்குறுதிகளைக் கூட இவர்களால் நிறைவேற்ற முடியாது. எல்லாம் ஆட்சியை பிடிப்பதற்கான வெற்று கோஷம்தான் என்பது மக்களுக்கும் தெரியாததல்ல. குதிரைக்குக் கொம்பு முளைக்காது; அதுபோல் பா.ஜ.கவும் ஆட்சிக்கு வர முடியாது என்பதுதான் என் அழுத்தமான நம்பிக்கை!'' என்கிறார் வாழப்பாடி.

**பா.**ஜ.கவினர் எவ்வளவுதான் சொன்னாலும் சிறுபான்மை சமூகத்துக்கு அவர்களிடம் நம்பிக்கை போய் விட்டது என்பது வெளிப்படை. அதிலும் குறிப்பாக, சுப்ரீம் கோர்ட்டில் அவ்வளவு தூரம் உ.பி.அரசு வாக்குறுதிகளைக் கொடுத்த நிலையிலும் போலீஸ் கைகளை கட்டிப் போட்டு, மசூதியைத் தரைமட்டமாக்கியபோதே கொஞ்ச நஞ்சம் இருந்த நம்பிக்கையும் அந்தப் புழுதியுடன் கலந்து விட்டது.

இருப்பினும், ''எவர் வேண்டுமானாலும், எந்த வழிபாட்டு முறையை வேண்டுமானாலும் பின்பற்றும் உரிமையை அளித்துள்ளது நமது பாரம்பரியம். ஆகவே, மத, மொழி, மாநில, வழிபாட்டுமுறைகள் வேறாக இருந்தாலும், அனைவரும் இந்த நாட்டு மக்களே என்பதைக் குறிக்கோளாகக் கொண்டது பா.ஜ.க.'' என்கிறார் ஜனா கிருஷ்ணமூர்த்தி.

''மதவெறிக்கு தேசிய முலாம் பூசும், பா.ஜ.க.வின் போக்கு நாட்டிற்குப் பேராபத்தை விளைவிக்கும். மதத்தைத் தேர்தல் லாபங்களுக்காக அரசியலில் கலப்பதென்பது பாலில் விஷத்தைக் கலப்பது போலாகும். அமெரிக்கா போன்ற நாடுகளில் உள்ள சில மோசமான விஷயங்களைக் கூட நம்மவர்கள் வெகு கலபமாகப் பின்பற்றுகிறார்கள். ஆனால் பல நல்ல விஷயங்களை எடுத்துக் கொள்வதில்லை. உதாரணமாக அமெரிக்க ஜனாதிபதிகள், மதத்தை விட்டு விலகியே நிற்கின்றனர். 'நான் பிறப்பால் ஒரு கத்தோலிக்கன் என்றாலும், அந்த மார்க்கத்துக்கு உழைப்பவன் அல்ல' என்று கென்னடி ஒருமுறை சொன்னார். 1930ல் அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த ஜாக்ஸன் என்பவர் பதவியில் இருந்த போது சர்ச்சுக்குக் கூடச் செல்லாமல் இருந்தாராம். பலமுறை மனைவி வற்புறுத்திய போதும், 'பதவிக் காலம் முடிந்த பிறகு சர்ச்சுக்கு வருகிறேன்' என்று சொல்லி விட்டாராம்!

''ஆனால் இங்கே என்ன நடக்கிறது. சாமியார்கள் சொல்கிறபடிதான் கட்சி நடக்கிறது. நாளை பா.ஜ.க. ஆட்சிக்கு வந்தால் அதே சாமியார்களின் சொற்படிதானே ஆட்சியும் நடக்கும். பாபர் மசூதி இடிக்கப்பட்டதை இன்னமும் அவர்கள் நியாயப்படுத்திப் பேசுகிறார்களே தவிர, வருத்தப்படுவதில்லையே. இவர்கள் ஆட்சிக்கு வந்தால் சிறுபான்மையினருக்குப் பாதுகாப்பே கிடையாது என்பது நிச்சயம்'' என்கிறார் தி.மு.க. செய்தித் தொடர்பாளர் ஆலடி அருணா. ''எங்களைப் போன்ற சிறுபான்மையினரை விடுங்கள். பா.ஜ.க. ஆட்சிக்கு வந்தால் நாட்டிற்கே பாதுகாப்பு கிடையாது'' என்று சொல்கிறார் முஸ்லீம் லீக் தலைவரான அப்துல் சமது.

**பா.**ஜ.க.வினர் தாங்கள் ஆட்சிக்கு வந்தால் 'காஷ்மீருக்கு உள்ள தனி அந்தஸ்தை கண்டிப்பாக எடுத்து விடுவோம்' என்று கூறி வருவது முஸ்லிம்களின் பயத்தை அதிகரித்துள்ளதென்பது உண்மை. இது பற்றிக் கேட்ட போது, ''காஷ்மீரைப் பற்றிச் சொல்லும் போது அங்கு மெஜாரிட்டியாக உள்ள முஸ்லிம்களின் உணர்வு

களைப் புரிந்து கொள்ள வேண்டும் என்கிறார்கள்; அது சரி, ஒப்புக் கொள்கிறோம். அதே நோக்கில், இந்தியாவைப் பொறுத்த வரை இந்துக்கள்தானே பெரும்பான்மை. ஆனால் அவர்கள் உணர்வுகளுக்கெதிராகப் பல காரியங்கள் நடக்கின்றனவே. இது எப்படிச் சரியாகும்?'' என்கிறார் ஜனா கிருஷ்ணமூர்த்தி.

''இந்தியா மதவாதத்தை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் நாடல்ல என்பதைப் பா.ஜ.க.வினர் அடிக்கடி மறந்து விடுகிறார்கள். பாகிஸ்தானோ அல்லது ஏனைய அரபு நாடுகளோ தங்களை இஸ்லாமிய நாடுகள் என்று அறிவித்துச் செயல்படுகின்றன. ஆனால் இந்தியா அப்படியில்லை; ஜனநாயக நாடு என்றுதான் சொல்கிறோம். ஆக உண்மையான ஜனநாயகம் நம் நாட்டில் நிலவ வேண்டுமென்றால், மத, மொழி சிறுபான்மையினரைப் பயமுறுத்துவது போல் அரசாங்கம் செயல்படக் கூடாது. அவர்களைக் கைதூக்கி விட வேண்டும். இது அவர்களை தாஜா செய்யும் பாலிசியல்ல; மனிதப் பண்பாட்டையும் மெஜாரிட்டி சமூகத்தினரின் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையையும் தெரிவிக்கும் போக்குத்தான்'' என்கிறார் வாழப்பாடி.

## மொய்லி கொடுத்த டென்ஷன்!

பெங்களூரில் நடந்த பாரதிய ஜனதா மாநாட்டில் நடிகை லட்சுமி கலந்து கொண்டு கட்சியிலும் சேர்ந்து விட்டார் என்ற செய்தி வந்ததுதான் தாமதம், அடுத்த நாள் நிகழ்ச்சிக்கு மிச்சம் மீதியிருந்த கன்னட நடிகர் பட்டாளமே வந்து விட்டது! பெங்களூர் மாநாட்டை மிகுந்த பரபரப்பாக நடத்திக் காட்ட வேண்டும் என்ற பி.ஜே.பியின் எண்ணம் ஈடேறாமல் போனதற்குக் காரணம், ஹர்ஷத் மேத்தா. பத்திரிகைகளின் கவனத்தை, அவர், தம் பக்கம் திருப்பிக் கொள்ளவே கொஞ்சம் தடுமாறிப் போய் விட்டனர் பி.ஜே.பி. தலைவர்கள். 'இந்த மாநாடு நடைபெறுவதே ஹர்ஷத் மேத்தா தந்த பணத்தினால்தான்' என்று தம் பங்குக்கு ஒரு வெடியை மொய்லி தூக்கிப் போட, பி.ஜே.பி. தலைவர்களுக்கு ஏக டென்ஷன்!

\- அமுதவன்

அனைவருக்கும் பொதுவான சிவில் சட்டம் என்பது பா.ஜ.க.வின் கோஷம். சிறுபான்மையினருக்கு பயத்தைக் கொடுக்கும் கோஷங்களில் இதுவும் ஒன்று. ''இந்து சிவில் சட்டத்தைப் பொதுவானதாக அமுல்படுத்த வேண்டும் என்று பா.ஜ.க. கூறவில்லை. நடைமுறையில், இந்தியா மற்றும் உலகளாவிய நாடுகளின் பொதுச் சட்டங்களை அடிப்படையாக வைத்து, ஒரு புதிய சிவில் சட்டம் ஏற்படுத்தப்பட வேண்டும் என்றுதான் பா.ஜ.க. கூறுகிறது'' என்கிறார் ஜனா கிருஷ்ணமூர்த்தி. ஆனால் சிறுபான்மையினரோ, 'மெஜாரிட்டி சமூகம் தங்கள் மத நம்பிக்கைகளில் மூக்கை நுழைக்கிறது' என்றுதான் நினைக்கிறார்கள்.

''ஸ்ரீலங்காவில் 1956-ல் புத்த மதத்தையும், சிங்கள மொழியையும் திணித்த போது எழுந்த தலைவலிதான் இன்று வரை அங்கு நடக்கும் போராட்டங்களுக்கு அடிப்படை. இதை பா.ஜ.க.வினர் புரிந்து கொள்ள வேண்டும். அவர்கள் ஆட்சிக்கு வந்தால் இந்தி மொழியைக் கண்டிப்பாய்த் திணிப்பார்கள். இதனால் பெரும் பிரச்னைகள் எழும்'' என்கிறார் பண்ருட்டி.

''அத்வானியோ, வாஜ்பாயோ யாராக இருந்தாலும் அவர்களுக்கு ஆங்கிலம் தெரிந்திருந்தாலும், இந்தியில்தான் பேசுவார்கள். பாராளுமன்றத்தில் நாங்கள் சில சமயம் தமிழில் பேசும் போது எதிர்த்துக் கோஷம் போடுவார்கள். வாஜ்பாய் ஜனதா அரசில் வெளியுறவுத் துறை அமைச்சராக இருந்த போது, ஐ.நா. சபையில் இந்தியில் பேசினார். அவ்வளவு மொழி வெறி அவர்களுக்குண்டு. பா.ஜ.க. வந்தால் இந்தி கட்டாயம் திணிக்கப்படும். இது பல கலவரங்களை உருவாக்கும்!'' என்கிறார் ஆலடி அருணா.

இப்படி, சமூக - அரசியல், சாதக, பாதகங்கள் ஒரு பக்கம் அலசப்பட, பொருளாதார விஷயங்களில் பா.ஜ.க.வின் போக்கு எப்படி இருக்கும் என்பது பற்றியும் கவலைபட விவாதிக்கப்பட்டு வருகிறது. ''நரசிம்மராவ் இரண்டு வருடத்துக்கு முன் கொண்டு வந்த ''எளிமையாக்கும்'' தொழிற் கொள்கையை பா.ஜ.க. ஆதரித்தது. இப்போது எதிர்க்கிறது. தேர்தலுக்குத் தேர்தல், பா.ஜ.க.வின் பொருளாதாரக் கொள்கைகள் மாறிக் கொண்டே இருக்கின்றன. பொருளாதார கோஷங்களை முன் வைப்பதை விட ராமரை முன்னிறுத்துவதுதான் லாபம் தரும் என்பதை பா.ஜ.க. புரிந்து கொண்டிருக்கிறது'' என்கிறார் வாழப்பாடி.

ஆனால் ஜனா கிருஷ்ணமூர்த்தி இதை மறுக்கிறார். ''காந்தீயப் பொருளாதாரம் தான் எங்களின் அடிப்படை. இந்தியாவில் கிடைக்கும் பொருட்களை வைத்து, மனித சக்தியை முழுமையாகப் பயன்படுத்தி நாட்டை முன்னேற்ற வேண்டுமென்பது தான் எங்கள் குறிக்கோள். காங்கிரஸ் அரசின் பொருளாதாரக் கொள்கை தோற்று விட்டது. உற்பத்தி செய்பவருக்கு நல்ல



## சூப்பர் அரசியல்வாதி யார்?

நம் ஊரில் அரசியல் வாதிகளுக்குப் பஞ்ச மில்லை. அவர்கள் விடும் ஸ்டேட்மென்ட்களுக்கும் பஞ்சமில்லை. எஸ்.வி. சேகர், கிரேஸி, ஒய்.ஜி.எம். எல்லோரை விடவும் வயிறு குலுங்கச் சிரிக்க வைக்கும் நகைச்சுவையாளர்கள் நமது மாண்புமிகு அரசியல்வாதிகள்தான்! அப்படியான அ.வாதிகளுள் உங்கள் கணிப்பில் 'சூப்பர் அரசியல்வாதி' என்று யாரை, ஏன் சொல்லுவீர்கள்? 'சூப்பர் கிண்டல்களை'த் தாங்கி வரும் உங்கள் கார்டுகள் (தபால் கார்டில் மட்டுமே எழுத வேண்டும்) எங்களுக்கு ஜூலை 15-க்குள் கிடைக்க வேண்டும்.

முகவரிப் பகுதியில் 'சூப்பர் அர சியல்வாதி' என்று மறக்காமல் குறிப் பிடுங்கள்! அதிசூப்பரான கிண்டல் ரூ 100 பரிசு பெறும். பிரசுரமாகும் இதர ஜட்டங்களுக்குச் சன்மானம் உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

- ஆசிரியர்

---

விலை கிடைப்பதில்லை. நுகர்வோரும் விலைவாசி உயர்வினால் அவதிப்படுகிறார்கள். இந்த நிலை மாற பா.ஜ.க. பாடுபடும். இதற்காக நவீன விஞ்ஞான தொழில் நுட்பங்கள் பயன்படுத்தப்படும்'' என்கிறார் அவர். அது மட்டுமல்லாமல் எல்.டி.டி.இ., இட ஒதுக்கீடு போன்ற விஷயங்கள் தேசியப் பிரச்னைகளாகக் கருதப்பட்டு சர்வ கட்சிகளின் ஆலோசனைகள் நாடப்படும் என்கிறார்.

''நாடு அமைதியாக இருந்தால்தானே பொருளாதார மாற்றங்களை அமல்படுத்த முடியும். பா.ஜ.க.வின் ஆட்சியில், அதன் 'இந்துத்வ' கோஷம் மற்றும் இந்தித் திணிப்பின் விளைவாக, வன்முறை கலாசாரம் வளரும். கலவரங்கள் பெருகும். ஜெர்மனியில் ஹிட்லர் ஆண்ட போது யூதர்கள் கொடுமைப்படுத்தப்பட்டதைப் போல் இந்தியாவில் சிறுபான்மையினர் பாதிக்கப் படுவார்கள். இந்த நிலையில் பொருளாதாரமாவது, வளர்ச்சியாவது...!'' என்கிறார் வாழப்பாடி.

''நான்கு மாநிலங்களில் நாங்கள் ஆண்ட போது எந்த கலவரங்களும் கிடையாது. வாஜ்பாய், அத்வானி ஆகியோர், முன்பு ஜனதா அரசில் சிறப்பாகப் பணியாற்றியவர்கள். அந்த அனுபவம் ஆட்சி நடத்த உதவும்'' என்று ஜனா கிருஷ்ண மூர்த்தி சொல்வதை மறுப்பவர்களும் இருக்கிறார்கள்.

''பா.ஜ.க. நான்கு மாநிலங்களை ஆண்ட போது, மதக் கலவரங்கள் இல்லாததற்குக் காரணம், அங்குள்ள சிறுபான்மையினரிடம் இருந்த பய உணர்வுதானே தவிர, மதநல்லிணக்கம் அல்ல. குறிப்பாகச் சொல்லப் போனால், இந்தூர், ஜெய்ப்பூர் ஆகிய நகரங்களில், பல வருடங்களாகக் கடைகள் வைத்து வியாபாரம் செய்து கொண்டிருந்த இஸ்லாமிய சகோதரர்கள் துரத்தியடிக்கப்பட்டு, அந்த இடங்களை ஆர்.எஸ்.எஸ்.காரர்கள் ஆக்ரமித்துக் கொண்டார்கள். எதிர்த்துக் குரலெழுப்பியவர்கள் அடித்து நொறுக்கப்பட்டார்கள். இதுதான் அங்கிருந்த நிலை'' என்று கட்டிக் காட்டுபவர்களும் இருக்கிறார்கள்.

இந்தச் சூழ்நிலையில் 'ராமர் பிரச்னை மட்டும் எங்கள் ஒரே பிரச்னையல்ல' என்று சொல்லியிருக்கிறார், அத்வானி. அதனை வலியுறுத்தும் வகையில் ஊழலை எதிர்த்தும், நாட்டின் ஒற்றுமையையும், பாதுகாப்பையும் வலியுறுத்தியும் மூன்று மாத கால மக்கள் இயக்கம் ஒன்றை நடத்த பா.ஜ.க. தீர்மானித்திருக்கிறது. இந்த இயக்கம் முடிவதற்கும், நான்கு வட இந்திய மாநிலங்களில் சட்டமன்றத் தேர்தல்கள் வருவதற்கும் சரியாக இருக்குமாம். அந்த மாநில சட்டமன்றங்களைக் கைப்பற்றி விட்டால், மத்தியில் காங்கிரஸ் தொடர்ந்து ஆளுவது தார்மீக நோக்கில் குற்றமாகி விடும். எனவே, இடைத் தேர்தல் வந்தே தீர வேண்டும் என்று பா.ஜ.க. கருதுகிறது.

இதற்கிடையில், மே. வங்க முதல்வர் ஜோதிபாசு, ''பா.ஜ.க. ஆட்சிக்கு வந்தால், மே.வங்கம் தனிநாடாகிப் போகும்'' என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டிருக்கிறார் ஒரு பேட்டியின் போது. ஆக மொத்தம் இன்றைக்குள்ள அரசியல் சூழ்நிலையில் பி.ஜே.பி. ஆட்சிக்கு வரும் சாத்தியக்கூறுகள் மிக அதிகமாக இருந்தாலும் அப்படி வந்த பிறகு இங்கு அமைதி நிலவுமா மெய்யான ராமராஜ்யமாக அது விளங்குமா என்பது குறித்து ஐயப்பாடுகளும் மிக அதிகமாகவே உள்ளன.

- ப்ரியன்

படங்கள் : கோபிநாத்

அத்வானி அட்டை வண்ணப்படம் : டி. ராமமூர்த்தி





**டென்னிஸ் கோச்சிங்**
**பாட்டு கிளாஸ்**
**நாட்டிய வகுப்பு**
**ஃபிரெஞ்சு பயிற்சி வகுப்பு**
**கம்ப்யூட்டர் கோர்ஸ்**
**- இந்தப் பட்டியலில்**
**இன்னொன்றையும்**
**சேருங்கள் :**
**சிந்தனை வகுப்பு!**
**ஆச்சரியம் வேண்டாம்;**
**அமெரிக்காவில் கட்டாயப்**
**பாடமாகவுள்ள இந்த வகுப்பு**
**இங்கே பாப்புலராகும் நாள்**
**வெகு தொலைவில் இல்லை.**

# வாங்க, சிந்திக்கக் கற்றுக் கொள்வோம்!

● சாம்பார் வெங்காயம் உரிக்க ஒரு கருவி. கோலி குண்டு அளவில் பல்லாங் குழிப் பள்ளங்கள் கொண்ட ஒரு பலகை. குழிக்கு ஒரு வெங்காயம் வீதம் விழும்படி பரப்பி விடவும். சோடா பாட்டில் மூடி போல் கூர்மையான வட்டத் தகரங்கள் பொருந்திய மற்றொரு பலகை. இதைக் கொண்டு வெங்காயப் பலகையை ஓர் அழுத்து அழுத்தவும். தோல் தனியே நெகிழ, வெங்காயம் மட்டும் முழித்துக் கொண்டு நிற்கும்.

● உங்கள் தெருவில் குப்பை கூளங்கள் அகற்றும் மாநகராட்சி வேலையாட்கள் ஒழுங்காக வேலை செய்கிறார்களா என்பதைப் பரிசோதிக்க ஒரு வழி :

கிழமைக்கு ஒரு கலர் வீதம் காகிதங்கள் தேர்ந்தெடுத்து, அவற்றைத் துண்டு துண்டாக்கித் தெருவில் சிதறுங்கள். எத்தனை நிறங்களில் காகிதங்கள் உள்ளனவோ அத்தனை தினங்களாகத் தெரு கூட்டப்பட வில்லை என நிரூபிக்கலாம்.

● பெண்களின் தங்க நகை ஆசையை முறியடிக்க இப்படியெல்லாம் செய்ய லாமே :

அலுமினிய பாத்திரங்களுக்குப் பொன் நிறம் கொடுத்து விடலாம்.

தங்கம் அணிந்தாலே பயங்கரமான அரிப்பு ஏற்படும்படி செய்யலாம்.

தங்கம் அணியாதவர்களுக்கு ஊக்கத் தொகை வழங்கலாம்!

- இப்படி சிறிதும் பெரிதுமான பிரச்னைகளுக்குக் கற்பனையும் கூர்மை யும் கலந்த தீர்வுகள் வெளிப்பட்டன... எங்கே...? எலிசபெத் ராய் நடத்திய சிந்தனை வகுப்புகளில்.

அந்த வகுப்புகளின் சரித்திரச் சுருக்கம் இதுதான் :

'உனக்கு யோசிக்கவே தெரியலை...' என்று நம் மீது யாராவது குற்றம் சாட்டினால் நிச்சயமாக யோசிக்காமல் கோபப்படு வோம்!

எலிசபெத் ராய் இப்படித்தான் கோபப்பட்டார் - எட்வர்ட் டி போனோ (Edward de Bono) வின் எழுத்துக்களைப் படித்த போது... சிந்தனை ஆற்றல் பற்றி அலசிய டி. போனோவின் நூல்கள், சராசரி மனிதனின் சிந்தனை குறித்துச் சவாலான கேள்விகளை எழுப்பின. சிந்திக்கும் ஆற்றலை நாம் சரியாகப் பயன் படுத்துவதில்லை என்பதை நாசூக்காகக் கூறின.

கோபப்பட்டாலும் டி. போனோவின் புத்தகங்களைத் திரும்பவும் படிக்க வேண்டும் என்ற உந்துதலை எலிசபெத்தால் அடக்க முடியவில்லை. மீண்டும் படித்த போது சிந்தனை ஆற்றலை இன்னும் என்னென்ன வகைகளில் பயன்படுத்தலாம் என்பது தெளிவாயிற்று.



எலிசபெத் ராய் தனியார் கல்லூரியில் விரிவுரையாளர். 'சிந்தனைச் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ள மாணவிகளுக்கு வகுப்புகள் நடத்தினால் என்ன?' என்ற புதிய சிந்தனை பிறந்தது. ஆடோனமஸ் கல்லூரி என்பதால் சிக்கலின்றிச் சிந்தனை வகுப்புகளைப் பாடத் திட்டத்தில் புகுத்த முடிந்தது. 'Generative thinking' என்ற பெயருடன் தொடங்கப்பட்ட வகுப்புகளுக்குப் பாடத் திட்டம் வரைய டி போனோவின் நூல்கள்தான் அடிப்படை என்றாலும் அவற்றை உள்ளூர்த் தேவைகள், சூழல்களுக்கு ஏற்ப மறுவடிவமைப்புச் செய்தி ருந்தார் எலிசெபத்.

வகுப்புகளில் சேர்ந்த மாணவிகளுள் பெரும்பாலோர் எலிசபெத்தைப் போலவே 'நமக்கு யோசிக்கக் கற்றுத் தர இவங்க யாரு?' என்ற தார்மிகக் கோபத்துடன், 'அப்படி என்னதான் சொல்கிறார்கள் பார்ப்போமே?' என்ற ஆவலும் மேலிட வந்தார்கள்.

சராசரி வகுப்பறைப் பாடங்களாக இல்லை Generative thinking பயிற்சி. மாணவிகள் தங்கள் விருப்பப்படி குழுக்கள் அமைத்துக் கொள்ள அனுமதிக்கப் பட்டார்கள். எதைக் குறித்துச் சிந்திக்க வேண்டும் என்பதைத் தீர்மானிக்கும் உரிமையும் அவர்களுக்கு இருந்தது. தேர்ந்தெடுத்த விஷயத்தை அக்கு வேறு ஆணி வேறாக அலசித் தீர்த்தார்கள். தேவையானால் மட்டுமே விரிவுரையாளரின் உதவியை நாடினார்கள். அவர் சொன்ன கருத்துக்கள் தவறு என்று தோன்றினால் துணிச்சலுடன் மறுத்து வாதாடினார்கள்.

ஒவ்வொரு குழுவும் தனியே எடுத்த முடிவு அல்லது தீர்மானம் வகுப்பின் அனைத்து மாணவிகளுக்கும் தெரிவிக்கப்பட, அவற்றை மீண்டும் அலசி ஒட்டுமொத்தமாக அந்த வகுப்பே ஒரு தீர்மானத்துக்கு வந்தது.

மதிப்பெண்கள்....? குழுவின் ஆற்றல், ஈடுபாடு, உற்சாகத்தைப் பொறுத்தே அதன் உறுப்பினர்கள் மதிப்பெண்கள் பெற்றார்கள் என்பதால் ஒவ்வொருத்தரும் தங்கள் உச்சகட்ட முயற்சியையே முன்வைத்தார்கள். விரிவுரையாளரின் உதவி கேட்டதற்காகவோ, வாதங்களினூடே தவறு செய்ததற்காகவோ மதிப்பெண் குறைக்கப்படவில்லை.

மதிப்பெண்கள் ஒரு பக்கம் இருக்க, இந்த வகுப்புகள் மாணவிகளுக்கு ஏராளமான தன்னம்பிக்கையுடன் பிறர் கருத்தை மதிக்கும் பொறுமையையும் அளித்தன.

இந்த நூதன வகுப்புகளை இரண்டு வருடங்களுக்கு நடத்திய எலிசபெத் ராய் இன்று தமது விரிவுரையாளர் பணியிலிருந்து விலகி விட்டார்.

பத்திரிகைகளுக்கு எழுதுவதுடன், போதுமான அளவு மாணவர்கள் (15-18) கிடைக்கும் போது சிந்தனை வகுப்புகள் நடத்துகிறார்.

''நல்ல வருமானம் அளித்த கௌரவமான வேலையை ஏன் விட வேண்டும்...?'' என்று கேட்டால் எலிசபெத் ராயிடம் பதில் தயாராய் இருக்கிறது.

''கல்லூரி, பல்கலைக் கழகம் என்ற அமைப்புகளிலிருந்து விடுபட்டு வந்தால் நான் இன்னும் சிறப்பாகச் செயல்பட முடியும் என்று தோன்றியது. ஒவ்வொரு மாதமும் அதே அளவு சம்பாதிக்க முடியாமல் போனாலும் நான் சந்தோஷமாகவும் திருப்தியாகவும் இருக்கிறேன்...'' என்கிறார் எலிசபெத் ராய்.

சிந்தனை வகுப்புகள் நடத்துபவர் சிந்திக்காமலா பேசுவார்!

– எஸ்.ஆர்.

படம் : கோபிநாத்



# பி. வாசு காபி ஸ்டால்

இவ்விடம் சூடான (கலப்படம் இருந்தும்) சுவையான காப்பிக் கொட்டை வறுத்து, அரைத்து, டிகாக்ஷன் இறக்கி ஸ்ட்ராங்கான காப்பி போட்டுத் தரப்படும்!

| ஐட்டம்ஸ் | கொள்முதல் நிலையம் | டிகாக்ஷன் சேர்க்கும் அளவு |
|---|---|---|
| கதை | எங்க வீட்டுப் பிள்ளை, ராஜா சின்ன ரோஜா | 150% |
| முடிவு | பணக்காரன் | 100% |
| சுஜாதா கேரக்டர் | கொடி பறக்குது | 200% |
| நிழல்கள் ரவிகேரக்டர் | கல்யாணராமன் | 50% |
| 'விஷம்' கொடுக்கிற சீன் | அபூர்வ சகோதரர்கள் | 99¾% |
| எஸ். எஸ். சந்திரனிடம் ரஜினி பேசும் காட்சிகள் | தெய்வமகள் | 60% |
| அந்த 'கூண்டு' சண்டைக் காட்சி+லைட்டிங் | அக்னி நட்சத்திரம் | 35% |
| 'உழைப்பாளியும் நானே' பாடல் ஆரம்ப சீன் | அண்ணாமலை | 25% |
| தாய்ப் பாசப் பாடல் | தளபதி, மன்னன், மற்றும் சில ராமராஜன், ராஜ்கிரண் படங்கள் | 40% |
| டூயட் பாடலில் ஹெலிகாப்டர் வியூ | ரோஜா | 50% |
| மொப்பெட்டில் 'பரமசிவன்' காமெடி க்ளைமேக்ஸ் | யோகம் ராஜயோகம் | 25% |
| | 100000000 ஹிந்தி மற்றும் தமிழ் மசாலாப் படங்கள் | 1000% |

**ஒரே ஒரிஜினல் : ரஜினி!**

- ஆர். பி. ஆர்.

# உழைப்பாளி



# கல்கி




1993
ஜூலை 11
மலர் : 51
இதழ் : 50
ஸ்ரீமுக
ஆனி 27


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## மு.க. - வாழப்பாடி மோதல்!

ஹர்ஷத் மேத்தாவின் ஒரு கோடி ரூபாய் ஊழல் குற்றச்சாட்டு காரணமாக, ஜெயலலிதா அரசை டிஸ்மிஸ் செய்கிற தார்மிக பலத்தை இழந்து நிற்கிறது மத்திய அரசு. இதனால் 'ஜெ' நிம்மதிப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறார், நிச்சயம். அதே நேரத்தில், டிஸ்மிஸ் ஆகும் என்று ஆவலுடன் எதிர்பார்த்து வந்த தி.மு.க.வுக்கும் டிஸ்மிஸ் செய்யப்பட வேண்டும் என்று கூக்குரல் விட்டு வந்த தமிழக காங்கிரஸுக்கும் பெருத்த ஏமாற்றம் ஏற்பட்டிருக்கும், ஐயமில்லை. இந்த ஏமாற்றத்தை மறைத்துக் கொண்டு தி.மு.க. தலைவரும் தமிழக காங்கிரஸ் தலைவரும் தற்போது ஒருவர் மீது ஒருவர் கரி பூசும் காரியத்தில் இறங்கியிருக்கின்றனர்.

ஜெ அரசு டிஸ்மிஸ் செய்யப்பட வேண்டும் எனில், அடுத்து காங்கிரஸ் ஆட்சிக்கு வர தி.மு.க. ஒப்புக் கொள்ள வேண்டும் என்றும் இதற்கு விட்டுக் கொடுத்துச் சம்மதிப்பதானால் அ.தி.மு.க. அரசு உடனே டிஸ்மிஸ் செய்யப்படும் என்றும் மத்திய காங்கிரஸ் தலைமை தமக்குத் தூது அனுப்பியதாகக் கருணாநிதி கூறியுள்ளார். இதற்குத் தாம் சம்மதிக்கவில்லை என்றும், அப்படி சம்மதிக்காததால்தான் ஜெ அரசு இன்னும் பதவியில் இருக்கிறது என்றும் எனவே தமக்குத்தான் ஜெ அரசு நன்றி கூற வேண்டும் என்றும் கருணாநிதி மேலும் பேசியுள்ளார்.

தூது அனுப்பப்பட்டது என்பதை வன்மையாக மறுக்கும் வாழப்பாடியோ, 'ஜெ அரசு டிஸ்மிஸ் ஆகாததற்கு கருணாநிதிக்குத்தான் நன்றி கூற வேண்டும் எனில், தி.மு.க.வானது அ.தி.மு.க. பக்கம் சரிகிறதா? நெருங்கி வருகிறதா? அ.தி.மு.க. குறித்து தி.மு.க.வின் சிந்தனைப் போக்கு மாறி விட்டதா?' என்றெல்லாம் வினாக்களைத் தொடுத்து இருக்கிறார்.

உண்மை எதுவாயினும் கருணாநிதியின் வாதத்தில் சாரம் அதிகம் என்பதை மறுப்பதற்கில்லை. அ.தி.மு.க. அரசு டிஸ்மிஸ் ஆகி தேர்தல் என்று வந்தால், வோட்டுக்கள் மும்முனையில் பிரிவது காரணமாக வெற்றி வாய்ப்பு தி.மு.க.வுக்கே அதிகம். எனவே காங்கிரஸ் தலைமை - டில்லியோ, தமிழகமோ, அல்லது இரண்டும் சேர்ந்தோ - தி.மு.க.வுக்குத் தூது விட்டுப் பார்த்து நிலைமையைக் கணித்திருந்தால் வியப்பதற்கில்லை.

கருணாநிதி, அ.தி.மு.க. அரசின் ஊழல்களைப் பட்டியலிட, அதைத்தான் இன்று காங்கிரஸும் மறுபதிப்புச் செய்து கொண்டிருக்கிறது. பொதுவாக 356 ஷரத்து பிரயோகத்தை தி.மு.க. எதிர்த்தாலும் ஜெ. ஆட்சி மீது தற்போது பிரயோகிக்கப் போதுமான காரணங்கள் உள்ளதாகவும் கூறுகிறது. ஆனால் இதற்காக வேண்டி, காங்கிரஸ் ஆட்சிக்கு வரக் கூடுமானால்தான் 356 பிரயோகிக்கப்படும் என்ற நிபந்தனையை தி.மு.க. ஏற்கத் தயாராக இல்லை. இந்த முடிவு நேர்மையானதும் கூட.

நடுநிலையிலிருந்து பார்க்கும் போது நம்மைப் பொருத்தமட்டில் 356 பிரிவு என்ன காரணங்களுக்காக அரசியல் சாசனத்தில் இடம்பெற்றதோ, அத்தகைய சூழ்நிலை மாநிலத்தில் உருவானாலொழிய அது பிரயோகிக்கப்படக் கூடாது என்பதே உறுதியான கருத்து. சர்க்காரியா கமிஷன் இந்த அம்சத்தை விரிவாக ஆராய்ந்து விளக்கமான அறிக்கையும் தந்துள்ளது. ஆனால் மத்திய அரசு இதையெல்லாம் யோசியாமல் 356 பிரிவை அடிக்கடி துஷ்பிரயோகம் செய்கிறது. இப் பிரிவு துஷ்பிரயோகமானது போல் வேறு எந்த அதிகாரமும் இந்த அளவுக்குத் துஷ்பிரயோகமானதில்லை.

அதுவும் மத்திய அரசே ஊழலில் திளைக்கும் போது, மாநில அரசு ஒன்றை ஊழல் குற்றச்சாட்டுக்களின் அடிப்படையில் டிஸ்மிஸ் செய்வது அதர்மத்தின் உச்சம். "சிகரெட் பிடிக்காதே!" "ரொம்ப நேரம் டீவி பார்க்காதே!" என்றெல்லாம் தகப்பன் மகனை க் கண்டிக்க வேண்டுமெனில் தகப்பன் முன்னுதாரணமாகத் திகழ வேண்டுமல்லவா?

வாழப்பாடி - மு.க. லேட்டஸ்ட் மோதல், பரபரப்பு நாளிதழ்களுக்குக் கரம் பக்கோடாவாக முடிந்து போகாமல், 356 ஷரத்து பற்றிய ஆரோக்கியமான விவாதமாக மலர்ந்தால் நாடு பயன்பெறும்.

பாலம்

●● என் மனைவி பல வருடங்களாக allergic bronchitis என்ற வறட்டு இருமலால் இரவும் பகலும் அவதிப்படுகிறாள். ஆஸ்துமா அல்ல. இவ்வித இருமலால் அவதிப்பட்டுக் குணமடைந்த நேயர்கள் விவரம் தெரிவித்தால் நல்லது.

- எஸ். ராஜகோபாலன்,
MF 4/218, Vrindhavan Colony,
Pattom, Trivandrum - 4.

●● நர்சரி மூலம் பூச்செடிகள், பழமரக் கன்றுகள் வளர்ப்பது பற்றிய நுணுக்கங்களை நேரில் வந்து, தங்கிக் கற்றுக் கொள்ள விருப்பம். உதவக் கூடிய நர்சரி உரிமையாளர்கள் எழுதவும். நன்றி.

- சி. கருப்பையா,
C/o. கணேசன் பலசரக்கு மளிகை,
மெயின் ரோடு,
குன்னூர் - 626 138.



●● பன்னிரண்டாம் வகுப்பு வரை படித்துள்ள எனக்கு பி.காம் படிக்க ஆர்வம் உள்ளதால் படித்த சகோதர - சகோதரியர் புத்தகங்கள் இலவசமாக அளித்தால் நன்றியோடு ஏற்பேன்.

- எஸ். ஸ்ரீகாந்த்,
41 F, மின் நகர்,
பாரதி புரம்,
தர்மபுரி - 636 705.

●● மத்தியப் பிரதேசம் போபாலில் வசிக்கும் கன்னட பிராமணர்களாகிய (மாத்வாஸ்) எங்களுக்கு, எங்கள் சாஸ்திரம் அறிந்த பிராமணப் புரோகிதர்களின் உதவி தேவைப்படுகிறது. உபநயனம், திருமணம், ஸ்ரார்த்தம் போன்றவை நடத்தித் தரக் கூடியவர்கள் தொடர்பு கொள்ள முகவரி :

- ஏ. பாண்டுரங்கன்,
B-241, Manasarovar,
201, 2nd Floor Nilgiri Apartments,
Shahpura, Bhopal - 462 016.

●● எனது Sanyo டீவி பழுதாகி விட்டது. அதற்கு Sanyo Model CPT 4450 V பார்ட் நெ. F0259 தேவைப்படுகிறது. இந்த பாகத்தைத் தந்து உதவக்கூடியவர்கள் தொடர்பு கொள்ளவும்.

- ஏ.ஆர். அமீர்ஜான்,
A-21, நேருஜி நகர்,
சேப்பநாயகன் ஏரி,
தென்கரை, தஞ்சாவூர் - 613 001.

●● ராஜம் அய்யரின் கமலாம்பாள் சரித்திரம் படிக்க ஆசை. கிடைக்குமிடம் - முகவரி தேவை. உரிய விலை கொடுத்துப் பெறவும் தயார்.

- சுந்தர செல்வகுமரன்,
அரசவனங்காடு (அஞ்சல்),
செம்பங்குடி - 612 603
நா. கா. மி. (மா.வ)

●● எனது சிவ பூஜைக்கு உபயோகிக்க ரிஷப வாகனம் பஞ்சலோகத்திலோ மரத்திலோ ஆனது தேவைப்படுகிறது. இத்தகைய ரிஷப வாகனம் உள்ள நபர்கள் தொடர்பு கொண்டால் தகுந்த விலை தந்து பெற்றுக் கொள்கிறேன்.

- ஒய். சிவராமகிருஷ்ணன்,
2/25, அல்லூர் (அஞ்சல்),
திருச்சி (மா.வ) - 620 101.

●● வேலை தேடும் 25 வயது இளைஞனாகிய நான் அச்சகம் அமைக்க விரும்புகிறேன். குறைந்த விலையில் பழைய அச்சகம் தேவை. உதவுங்கள். நன்றி.

- கே. புஷ்பராஜ்,
பரணியறத்தலவிளை,
கவியக்காவிளை,
குமரி (மா.வ) - 629 153.

(பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. - ஆர்.)

# பனிப்பாறை

ஆபஸ்தம்பன்

## 15

விகவம் பெரிய தவறு செய்து விட்டான். இதுவரையிலும் அவன் தவறே செய்ததில்லை என்று சொல்ல முடியாது. வாழ்க்கையின் ஒவ்வொரு படியிலும் அவன் செய்த தவறுகளே முன்னணியில் நிற்கின்றன. ஆனால் அவையெல்லாம் அவன் உணர்ந்தே செய்த தவறுகள். அவற்றின் தன்மை, ஆழம், விளைவுகள் இவற்றையெல்லாம் நன்கு நிறுத்துப் பார்த்து, திட்டமிட்ட தவறுகள். அதனால்தான் அவை அவனை பாதிக்கவில்லை. மற்றவர்களைத்தான் பாதித்தன. அவன் வேண்டியதும் அதுதானே!

ஆனால் இப்பொழுதோ?

தான் செய்யப் போவது விஷப் பரீட்சை என்ற உணர்வே இல்லாமல் அல்லவோ செயல்பட்டு விட்டான்.

விஷயம் இதுதான்.

ராமனின் பலவீனங்களை நன்கு உணர்ந்து கொண்டு இதுவரையில் செயல்பட்டவன், அவனுடைய பலம் எது என்பதைப் புரிந்து கொள்ளவில்லையே! அதனால்தான் ராமன் ராதாவைப் பற்றிய விவரங்களை அவனிடம் கூறிய போது, அவன் பெரிதாகச் சிரித்தான்.

''என்ன ராமா? இதுக்குப் போய்ப் பயப்படறியே? உன்னோட மனைவி நமக்கெதிரா சாட்சி சொல்லப் போறா - அவ்வளவுதானே? நீ கவலையே படாதே. எனக்கு நாலஞ்சு அடியாளுங்களைத் தெரியும். ஒரு நானூறு ரூபாயை வீசி எறிஞ்சிட்டோம்னா சாட்சி சொல்ல முடியாத அளவுக்கு அடிச்சுப் போட்டுடுவானுங்க. வா, இரண்டு 'பெக்' உள்ளே போனா எல்லாம் சரியாகி விடும். இதுக்குப் போய் இப்படி அலட்டிக்கிறாயே!''

ஆனால் ரெண்டு பெக் ராமனின் தொண்டையின் கீழே இறங்கவில்லை. அவன் சீக்கிரமே விடைபெற்றுக் கொண்டு வீடு நோக்கிச் சென்றான். ஸ்கூட்டரைச் சரியாக ஓட்ட முடியாமல் கைகள் நடுங்கின. ராமனின் பலம் அவனுடைய 'கோழை மனம்.' இதை விகவம் புரிந்து கொள்ளாமல் 'அடிதடி' என்று பேசியதும், அவன் மனம் அறிவுபூர்வமாகச் சிந்திக்கத் தொடங்கியது.

ராதாவை அடித்துப் போடுவதா? எதற்காக? தற்காப்புக்காகவா? இல்லை, தன் சுயநலத்தைக் காப்பாற்றிக் கொள்ளவா? தன் குற்றங்களை மூடி மறைக்கவா? எத்தனை நாட்கள்தான் இந்தக் குற்றங்கள் மறைந்து கிடக்கும்? என்றாவது ஒருநாள் அவை வெளியே வர மாட்டா என்பது என்ன நிச்சயம்?

பொழுது விடிந்ததும் அவன் நித்யாவைத் தேடிப் போனான். முதன் முறையாகப் போனதால் வீட்டைக் கண்டுபிடிக்கச் சிரமப்பட்டான்.

அழைப்பு மணியில் கையை வைத்ததும் மீண்டும் பயம் தலைதூக்கியது. நித்யாதான் கதவைத் திறந்தாள். ஒருகணம் திக்கித்துப் போய் நின்றவள், சமாளித்துக் கொண்டு -

''வா ராம், உள்ளே வா,'' என்றாள்.

அவனுக்கு காப்பி கலந்து எடுத்துக் கொண்டு வந்தாள். ராதா அப்போதுதான் குளிக்கப் போயிருந்தாள். குளித்து வர எப்படியும் அரை மணி நேரம் ஆகும். ராமன் காப்பி சாப்பிட்டு முடிக்கும் வரையில் அவனைப் பார்த்துக் கொண்டு நின்றாள் அவள்.

''ராதாவைக் கூட்டிண்டு போக வந்திருக்கியா ராம்? அவ குளிச்சிண்டிருக்கா.''

''அவ இங்கேயா இருக்கா?'' அவன் திடுக்கிட்டுக் கேட்டான். ''பூஜ்யா வீட்டுக்குப் போகலை?''

''இல்லை. என்கிட்டத்தான் இருக்கா. உனக்கு என்ன வேணும் இப்போ? அவ உன் கூடத் திரும்பி வருவான்னு நான் நினைக்கல்லை.''

குழப்பங்களின் உச்சநிலையிலிருந்த ராமனின் வாயிலிருந்து வார்த்தைகள் தட்டுத் தடுமாறி வந்தன.

''அக்கா... ராதாவை அவன் ஆள் வெச்சு அடிக்கப் போறானாம்.''

நித்யா அவனைக் கூர்ந்து நோக்கினாள். இவன் நிஜமாகவே பயந்து போய்த்தான் வந்திருக்கிறான் என்று தெரிந்தது. இவனைச் சிறிது நிறைவைத்தால் என்ன, என்று

தோன்றியது. குறும்புப் புன்னகையுடன் கேட்டாள் -

''அதுக்குப் போய் நீயேன் கவலைப்படறே? ராதா வைத்தானே அடிக்கப் போறான். உன்னையில்லையே! உனக்கு இதனால என்ன நஷ்டம்? நாளுக்கு நாள் வசதி பெருகிண்டு வர்றது. இன்னும் சில நாட்களிலே



பெரிய...ய பணக்காரனாகி விடுவே! ராதா எப்படிப் போனா உனக்கு என்ன?''

ராமன் திடுக்கிட்டான்.

அவனைக் கவனியாதவள் போல் அவள் தொடர்ந்து பேசினாள்.

''விகவத்தோட நீ போய்ச் சேர்ந்துண்டது உனக்கு ரொம்ப நல்லதாப் போச்சு. என்னோட இருந்தப்போ இருந்த பொருளாதார நிலையில இப்போ நீ இல்லை. நீ ரொம்பவும் முன்னேறிட்டே. நீ பண்ணின ஒரே ஒரு தப்பு - ராதாவைக் கல்யாணம் பண்ணிண்டது. அவள் உனக்கு ஏற்றவளே அல்ல - பாவம்! வேற யாரையாவது அவள் திருமணம் செய்துண்டிருந்திருக்கணும். உன்னோட 'மெண்டாலிடிக்கு' துர்கா மாதிரி - ஆமாம் நம்ம துர்கா மாதிரியே - மட்டமான லட்சியங்களைக் கொண்டிருக்கிற ஒரு பெண் கிடைச்சிருக்கணும். இனிமேல் ராதா எப்படிப் போனா உனக்கென்ன?''

அவன் தனது கைகளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

நிமிர்ந்து நித்யாவைப் பார்த்தான்

''அக்கா - எனக்கு பயமா இருக்கு!''

''உனக்கா? பயமா? என்ன சொல்றே ராமா? சொக்கலிங்கத்துகிட்டப் பணத்தைக் கொடுத்துட்டு, 'மனசாட்சியைக் கழற்றி வையுங்கன்னு' நீதானே சொன்னே?''

அவன் பேசவில்லை.

''என்னைப் பழிவாங்கற படலத்துல நீயும்தானே விகவத்தோட கூட்டு சேர்ந்திருக்கே! உனக்கு நான் 'பர்ஸனலா' என்ன துரோகம் செஞ்சேன்? கேவலம் பணத்துக்காக உன் மனசாட்சியை வித்துட்டே இல்லை?''

அவன் தீனமாக ''அக்கா...'' என்றான்.

''இப்போ நீ எதுக்காக இங்கே வந்திருக்கே? ராதா இங்கே இருக்கிற விஷயம் விகவத்துக்குத் தெரியும்னு நீ நினைக்கிறாயா? நீ என்ன பண்றதா உத்தேசம்?''

அவன் மௌனமாக இருந்தான்.

''இப்படிப் பேசாமலிருந்தா என்ன அர்த்தம்? எனக்கு எட்டு மணிக்கு ஒரு அப்பாயிண்ட்மெண்ட் இருக்கு.''

''அக்கா... அவன் ராதாவை ஏதாவது பண்ணிட்டான்னா?''

''ஹாங்! பண்ணிடுவானா? அது வரைக்கும் நாங்க எல்லாரும் சும்மா இருப்போம்னு நீ நினைச்சாயா? இந்த நித்யாவை என்னன்னு நெனைச்சிண்டிருக்கான் அவன்! வெளிநாட்டுல இருந்த வரைக்கும் குடியும், கூத்துமா இருந்து விட்டு, வாய் கூசாமல் உனக்காகக் காத்திருந்தேன்னு எங்கிட்டச் சொன்னானே ஸ்கௌண்டிரல்! ராதா மேல கையை வைக்க விடுவேனா!''

## அருள்வாக்கு



வேத கர்மா எதற்கு? மனமடங்கிப் பரமசாந்தமாக இருந்து கொண்டு கேட்டால்தான் குருமூலமாகப் பெறுகிற பிரணவமும் மஹாவாக்யமும் பரம புருஷார்த்தமான மோக்ஷத்தைக் கொடுக்கும். மனம் ஒருமைப்பட்டுக் கேட்காவிட்டால் பிரயோஜனம் இராது. உழுத இடத்தில் ஊன்றினால்தான் விதை பிரயோஜனப்படும். நாம் எவ்வளவோ உபந்நியாஸம் கேட்கிறோம்; கீதை முதலானதுகளை நிறைய வாசிக்கிறோம். ஆனாலும் நமக்கு ஏன் துக்கம் போகவில்லை? ஞானம் உண்டாகவில்லை? நாம் சித்த சுத்தி பண்ணிக் கொள்ளாமலே கேட்பதாலும் படிப்பதாலும்தான் அது நிரந்தரமாக நின்று பலன் தருவதில்லை. "வைதிக கர்மாக்களை நிறையப் பண்ணிப் பண்ணி ஈச்வரார்ப்பணம் செய். பலனை எதிர்பார்க்காமல், அதை பகவத் ஆராதனமாக நினைத்துக் கொள்" என்று ஆசார்யாள் சொன்னது, சித்த சுத்தியை, மனதின் அமைதியை உண்டாக்கிக் கொள்வதற்காகத்தான். கர்மாவால் மனதை உழுதாக வேண்டும். அது முதல் காரியம். அப்புறம் ஜலம் பாய்ச்ச வேண்டுமல்லவா? அதுதான் பக்தி. நம் ஹ்ருதயத்தில் ஜலம் பாய்ச்சுவது பக்திதான். ஈச்வரனிடமும், ஆசாரியனிடமும் பக்தி செலுத்த வேண்டும். குரு பக்தி இருந்தால் மனது தானாக சாந்தத்தை அடைகிறது. பெரியவர்களுக்கு, மஹான்களுக்கு முன் ஒன்றை வாசித்தாலும் கேட்டாலும், அல்லது அவர்களே ஒன்றைச் சொன்னாலும், அது மனதில் நன்றாகப் பதிகிறது. ஏனென்றால் அவர்கள் ஸந்நிதானத்தில் நம் மனஸ் ஒருவிதமான சாந்தத்தோடு இருக்கிறது. வெளியிலும், லைப்ரரியிலும் இப்படி இருக்கவில்லை. அதனால்தான் அங்கெல்லாம் படிப்பதும் கேட்பதும் நிற்காமல் ஓடிப் போய் விடுகிறது. மனஸ் குரு பக்தியில் நனைந்தால் உடனே பலன் உண்டாகும். அதனால்தான் மஹான்களாக இருக்கிறவர்களிடம் உபதேசம் கேட்க வேண்டும், எதையும் குருமுகமாகக் கற்க வேண்டும் என்பது. நாம் எவ்வளவோ படித்திருக்கிறோம். ஆனாலும் நமக்குள்ள அஞ்ஞானத் தடிப்பு கொஞ்சமும் குறையவில்லை. அது எந்த இடத்தில் குறையுமோ அங்கே போய்ச் சேர்ந்தால் அஞ்ஞானத் தடிப்பு தேய்ந்து போய், ஞானம் உதயமாகத் தொடங்கும். அப்படிப்பட்ட இடம் தான் ஆசாரியனின் சந்நிதி.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

அழைப்பு மணி ஒலித்திருந்தது. நித்யா கதவைத் திறந்தாள்.

சசித் நின்று கொண்டிருந்தான். அவனைக் கண்டதும் நித்யாவின் கொந்தளிப்பு சற்று அடங்கியது.

"ஹலோ சசித். எப்படி இருக்கீங்க? ஏது இந்தப் பக்கம்?"

ராமனைப் பார்த்தும் பார்க்காதது போல் நாற்காலியில் அமர்ந்தான் சசித்.

"இங்கே பக்கத்துல எங்க மாமா, வீடு வாங்கிட்டு வந்திருக்காரு. அவரைப் பார்க்க வந்தேன். அப்படியே உங்களையும் பார்த்துட்டுப் போயிடலாம்னு..."

நித்யா உட்கார்ந்து கொண்டாள். கூடப் பிறந்தவர்களுக்கு இல்லாத பாசம் இவனுக்கு மட்டும் எப்படிச் சாத்தியமாகிறது என்று எண்ணி வியந்தாள்.

"கட்டடம் இடிஞ்சு போனது பற்றி ஏதாவது தெரிஞ்சுதா மேடம்? நேற்று ஜகன்னாதன் சாரைப் பார்த்தேன். அவரு சொக்கலிங்கத்து மேல சந்தேகப்படறாப் போலத் தோணிச்சு. இத்தனை நேரம் மாமன் வீட்ல கூட இந்த விஷயத்தைப் பத்தித்தாங்க பேசிட்டிருந்தோம். அவரு ஒரு எம்.பிங்க."

"என்ன? எம்.பியா?" நித்யா ஆர்வத்துடன் கேட்டாள்.

"ஆமாங்க மேடம். ஏன் மேடம்? அவங்களால உங்களுக்கு ஏதாவது உதவி..."

"ஓ சசித்! நீங்க கடவுளே அனுப்பி வெச்சது போல வந்திருக்கீங்க. இப்பவே என்னை அவங்க வீட்டுக்குக் கூட்டிட்டுப் போக முடியுமா? ஒருசில புது சிக்கல்கள்..."

"நிச்சயமா, மேடம். இதோ.. இப்படியே போனாக்கா, பின்னால இருக்கிற தெருவிலதாங்க அவுங்க வீடு. நடந்தே போயிடலாம்."

நித்யா எழுந்து ராதாவைக் கூப்பிட்டாள்.

"ராதா... நான் சசித் கூட அவசரமா அடுத்த ரோடு வரையிலும் போயிட்டு வரேன். நீ வாசற்கதவைத் தாண்டி வெளியே வராதே. பிரசன்னா வந்தாக்க கொஞ்சம் 'வெயிட்' பண்ணச் சொல்லும்மா."

(தொடரும்)

# நர்மதைத் திட்டம்: நம்பிக்கைத் துரோகம்!

**'நர்மதா அணைத் திட்டம் மறுபரிசீலனை செய்யப்பட வேண்டும்' என்று அரசாங்கத்தை வலியுறுத்தி, சென்ற மாதம் பம்பாயில் உண்ணாவிரதம் மேற்கொண்ட மேதா பட்கர், முதற்கட்ட வெற்றியையும் பெற்று விட்டார். நர்மதா அணைத் திட்டம் என்பது என்ன? மேதா பட்கர் அத் திட்டத்தை எதிர்ப்பதற்கு என்ன காரணம்? அத் திட்டத்தால் ஆதிவாசிகளுக்கு என்ன பாதிப்பு?**
**இதோ, பம்பாயிலிருந்து நமது நேரடி ரிப்போர்ட்!**

மேதா பட்கர்! ஆயிரக்கணக்கான ஆதிவாசிகளாலும், கிராமவாசிகளாலும் தங்களுக்குக் கைகொடுக்க வந்த தெய்வம் என்றுதான் போற்றப்படுகிறார். காரணம், அவர்களுக்காக அவர் போராடுவதுதான்.

தந்தை தொழிற்சங்கத் தலைவர்; தாய் சமூக சேவகி. எனவே எளியவர்களுக்காகப் போராடுவதென்பது இவரது இரத்தத்திலேயே ஊறியிருக்க வேண்டும்!

பம்பாய் டாடா இன்ஸ்டிடியூட்டில் சமூக சேவையில் முதுகலைப் பட்டம் (Master of Social Work) - சிறிது காலம் அங்கேயே ஆசிரியப் பணி - பின்னர் பிஎச்.டி. என்று படிப்பறிவை வளர்த்துக் கொண்டாலும் அனுபவ அறிவுக்காக ''சேது'' என்ற இயக்கத்துடன் இணைந்தார்.

'சேது', அகமதாபாதை மையமாகக் கொண்டு, ஆதிவாசிகள், மலைஜாதியினர் போன்றவர்களின் முன்னேற்றத்துக்காகப் பாடுபடும் இயக்கம். இம் மக்களின் கொத்தடிமைத்தனமும் பின்தங்கிய வாழ்க்கை நிலையும் மனத்தை இம்சிக்க, சட்டத்தின் துணை கொண்டு போராடலாம் என்று முதலில் எண்ணிய மேதாவுக்கு, சட்டம் ஒரு இருட்டறை என்பது போகப் போகத்தான் விளங்கியது!

இந் நிலையில்தான் நர்மதை ஆற்றுத் திட்டத்தால் ஆதிவாசிகள் படும் தொல்லைகள் அதிகரித்து, பூதாகரமாக உருவெடுத்து நின்றன. இந்தத் திட்டத்தின்படி முப்பது பெரிய, 135 நடுத்தர மற்றும் 3000 சிறிய அணைக்கட்டுகளும், 'சர்தார் சரோவர் ப்ராஜெக்ட்' என்னும் மிகப் பெரிய அணைக்கட்டும், உலக வங்கியின் உதவியுடன் நிர்மாணிக்கத் திட்டமிடப்பட்டிருந்தன.

இத் திட்டம் நிறைவேற்றப்பட்டால் 12,000 ஹெக்டேர் செழிப்பான விவசாய நிலமும், காடு கழனிகளும் நீரில் மூழ்குவதோடின்றி, பத்து லட்சம் மக்கள் தம் குடியிருப்புகளை இழக்க நேரிடும் என்ற நிலை. எனவே, இதை எதிர்த்து, மேதா பட்கரின் தலைமையில் 'நர்மதா பச்சாவ் ஆந்தோலன்' என்ற அமைப்பு உருவானது.



● மேதா பட்கர்



* உண்ணாவிரதத்தின் போது...

இவர்களின் எதிர்ப்புக் குரல் அரசின் காதுகளுக்கு எட்டியதோ இல்லையோ, கடன் கொடுப்பவர்களின் (உலக வங்கியின்) செவிகளில் மோதியது. டாக்டர் ப்ரெட்ஃபோர்ட் மோர்ஸே தலைமையில், இத் திட்டத்தின் நெளிவு சுளிவுகளை ஆராய உலக வங்கியால் அமைக்கப்பட்ட கமிட்டி, 'இத் திட்டத்தினால் பாதிக்கப் படப் போகும் லட்சக்கணக்கான மக்களுக்கு மறு வாழ்வு என்பது தூரத்துக் கனவு! மேலும் இதனால் ஏற்பட இருக்கும் சுற்றுப்புறச் சூழலின் பாதிப்புகளையும் இதனைத் திட்டமிட்டவர்கள் சரியாக அனுமானிக்கவில்லை' என்று அறிக்கை வெளியிட்டது. உடனே உலக வங்கி, இந்த ஆண்டு மார்ச் மாதத்துக்குள் பாதிக்கப்பட்டவர்களுக்கு நஷ்டஈடு வழங்கப்பட்டு, மறுவாழ்வுத் திட்டம் பூரணமாக அமல்செய்யப் பட்டால்தான் கடன் தர இயலும் என்றொரு நிபந்தனை விதித்தது. இது நடக்காத காரியம் என்பது அரசுக்குத் தெரிந்து விட்டதால், கடனுதவி இன்றியே திட்டத்தை நிறைவேற்றுவதாகச் சபத மெடுத்தது!

இந்தியாவின் ஐந்தாவது பெரிய நதியான நர்மதை, மத்தியப்பிரதேசம், மஹாராஷ்டிரம், குஜராத் முதலிய மாநிலங்களின் வழியாகப் பாய்கிறது. ம.பி.யில் தாவா, பர்னா, பார்பி, சுக்தா என்னும் நான்கு பெரிய அணைக்கட்டுகள் கட்டப்பட்டு விட்டன. இங்கேயுள்ள கிராமங்கள் நீரில் மூழ்கடிக்கப்பட்டமையால் கிராம வாசிகளுக்கு வேறு நிலங்களும் குடியிருப்புகளும் வழங்கப்பட்டன. இதில் ஊழல் நடந்திருப்பதாக வழக்கம் போல் குற்றச்சாட்டுகள். தற்போது பிரச்னைகளாயிருப்பது, மஹாராஷ்டிராவிலுள்ள 'மணிபேலி' கிராமம். கிராமவாசிகளை வெளியேற்ற போலீசை ஏவி, அரசு வன்முறையைப் பயன்படுத்துவதாக 'ந.ப.ஆ'க்காரர்கள் குற்றஞ்சாட்டியுள்ளனர். ''உயிரை விட்டாலும் விடுவோமேயன்றி கிராமத்தை விட மாட்டோம்'' என்று ஆதிவாசிகள் மேதாவின் தலைமையில் போராட்டத்தை மணிபேலியில் துவங்கினர்.

''அணைகட்டுவதை நிறுத்தி விட்டு திட்டத்தை மறுபரிசீலனை செய்ய வேண்டும்'' என்று கோரி மேதா பட்கர், தேவராம் கார்வோரா(ம.பி.) மற்றும் முந்நூறு ஆதிவாசிகள் பம்பாய்க்கு வந்து, ஜுன் 3-ல் உண்ணாவிரதம் துவங்கினர். (முதலிருவர் நிரந்தர உண்ணாவிரதம், மற்றவர்கள் தொடர் உ.வி.) ஜுன் 4-ல், இது தற்கொலை முயற்சி என்று இவர்கள் கைது செய்யப்பட்டனர். செயிண்ட் ஜார்ஜ் மருத்துவமனையில் மேதாவை வற்புறுத்தி intravenous fluids செலுத்தப் பார்த்தனர். மேதாவோ ''இது தற்கொலை என்றால், அரசு செய்வது கொலை! விடுதலையாகும் வரை தண்ணீரைக் கூடத் தொட மாட்டேன்'' என்று மறுதளித்தார். ஜுன் 6-ல் விடுதலையானார். ஜுன் 9-ல், அரசு, ஆந்தோலனைச் சேர்ந்த ஐவருடன் பேச்சு வார்த்தைக்கு இசைந்தது. ஆனால் முதல்வர் பவாரோ 'என்னால் மறுவாழ்வுத் திட்டத்தைப் பற்றி வேண்டுமானால் பேச்சு வார்த்தை நடத்த முடியும். திட்டத்தை மறுபரிசீலனை செய்ய முடியாது' என்று சொல்லி விட்டார்.

இதற்கிடையில் ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ், நீர்வளத் துறை அமைச்சர் சுக்லாவுடன் பேச்சு வார்த்தைக்கு முயல, அவரும் கையை விரித்து விட்டதால் மேதாவின் உண்ணாவிரதம் பதின்மூன்றாவது நாளைத் தொட்டது. இந் நிலையில்தான் நாம் அவரைச் சந்தித்தோம்.

உண்ணாவிரதம் காரணமாக மிகவும் தளர்ந்து போயிருந்தாலும் தமிழ்ப் பத்திரிகை என்றவுடன் படுத்திருந்த மேதா பட்கர், மெல்ல எழுந்து சாய்ந்து கொண்டு புதிய உற்சாகத்துடன் பேசத் துவங்கினார்!

''உங்கள் போராட்டம் எந்த அளவு வெற்றியளித்திருக்கிறது?''

''போலீசாரை மணிபேலியிலிருந்து திரும்பி அழைக்கவும், மறுவாழ்வுத் திட்டத்தை அமல்படுத்தவும், ஆந்தோலன் ஆதரவாளர்கள் மீதிருந்த வழக்குகளைக் கைவிடவும் அரசு ஒப்புக் கொண்டு விட்டதே! திட்டத்தை மறுபரிசீலனை செய்யவும் விரைவில் இணங்கி விடுமென்றுதான்

நினைக்கிறேன்!''

''மறுபரிசீலனை என்பதெல்லாம் தெளிவற்ற பேச்சு. ம.பி.யில் ஏற்கெனவே அணைகள் கட்டப்பட்டு விட்ட இந்தத் தருணத்தில் அணைகட்டுவதையே நிறுத்துவதென்பது அபத்தமானது. மேலும் குஜராத்தின் வறண்ட கட்ச், சௌராஷ்ட்ரா பகுதிகளில் பசுமைப் புரட்சிக்கு சர்தார் சரோவர் தான் பதில்' என்று அமைச்சர் சுக்லா கூறியிருக்கிறாரே?

''இத் திட்டத்தால் லாபமடையப் போவது ஏற்கெனவே செல்வம் கொழித்துக் கொண்டிருக்கும் மத்திய குஜராத் பகுதியினர். பணக்காரர்களை மேலும் பணக்காரர்களாகவும், ஏழைகளை இன்னும் ஏழைகளாகவும் ஆக்கும் இந்தத் திட்டம் நமக்குத் தேவைதானா? மேலும், இத் திட்டம் முடிவடைவதற்கான சாத்தியக்கூறுகளே எனக்குப் புலப்படவில்லை. அணையினால் கிடைக்கக்கூடிய தண்ணீரைப் பெற பாசன வசதிகளோ, கால்வாய்களோ எதுவுமே அங்கே இல்லை! எதற்கெடுத்தாலும் அந்நியர்களிடம் கையேந்த வைத்து, அரசு நம்மைப் பிச்சைக்காரர்களாக்கப் பார்க்கிறது. பெரிய பெரிய அணைக்கட்டுகள் நமக்குத் தேவையில்லை! நம்மிடமிருக்கும் ஆட்படையை வைத்துக் கொண்டு நாம் அற்புதங்கள் நிகழ்த்தலாம். சர்தார் சரோவர் திட்டத்தைக் கைவிடட்டும்; 'கட்ச்'சில் ஒவ்வொரு கிராமத்திலும் எங்கள் ஆதரவாளர்கள் சென்று, எளிமையான வழிகளில் தண்ணீரை வரவழைத்துக் காட்டுகிறோமா இல்லையா பாருங்கள்!''

'''நிலம் இல்லாதவர்களும், மேஜரான பிள்ளைகளும், திருமணமாகாத பெண்களும் கூட ஒரு ஹெக்டேர் நிலம் பெறுவார்கள்; ஒவ்வொருவருக்கும் ரூ 4500 உதவித் தொகை வழங்கப்படும்; புதிய குடியிருப்புகள் அமைப்பதற்கு 50 சதம் கடனுதவியும், 50 சதம் உதவித் தொகையும் வழங்கப்படும்' என்ற அரசின் கவர்ச்சிகரமான அறிவிப்பை ஒட்டி, குஜராத்தில் 40 சதம் ஆதிவாசிகள் இந்தச் சலுகைகளை ஏற்றுக் குடிபெயர்ந்திருக்கிறார்களே! இந்தச் சலுகைகளில் உங்களுக்கு திருப்தி இல்லையா? அல்லது அமல்படுத்தப்படும் விதத்தில் குறைகாண்கிறீர்களா?''

''இவர்கள் கொடுத்த வாக்கைக் காப்பாற்றவில்லை! முதலில், சம்பந்தப்பட்ட குடும்பங்களுக்கு வேறிடத்தில் நிலபுலன்கள் வழங்கப்பட்டு, அவை இவர்களால் அங்கீகரிக்கப்பட்ட பின்னரே, இடமாற்றம் செய்யப்படுவார்கள் என்றார்கள். ஆனால் நடந்தது என்ன? மணிபேலியிலிருக்கும் 55 குடும்பங்களுக்கு, தபோலியில் வழங்கப்பட்டிருப்பது பயனற்ற வறண்ட நிலம்! போலீசை விட்டு, ஒவ்வொரு வீடாகப் புகுந்து தடியடி நடத்தி, வற்புறுத்தி அவர்களை வெளியேற்றுகிறார்கள். இவர்கள், வாழ்வோ சாவோ, அது மணிபேலியில்தான் என்ற முடிவுக்கு எப்போதோ வந்துவிட்டார்கள்! இந்த ஏழைகளுக்கு, அரசு ஒன்றும் தராவிட்டாலும், இருப்பதையாவது பிடுங்காமல் இருக்கலாமல்லவா? ம.பி.யிலும், பார்க் அணைக்காக அப்புறப்படுத்தப்பட்ட ஆதிவாசிகள் மீண்டும் அவர்களின் பழைய நிலத்துக்கே திரும்பி விட்டனர், தங்கள் எதிர்ப்பைத் தெரிவிக்கு முகமாக! ஆக, அரசின் மறுவாழ்வுத் திட்டம் எப்படி இருக்கிறது என்று பார்த்துக் கொள்ளுங்கள்!''

''உலக அரங்கில் இந்த சர்ச்சை தலைதூக்கியிருப்பதால் உங்கள் போராட்டத்துக்கான ஆதரவுகள் எப்படியுள்ளன?''

''ஆஜாத் மைதானில் மாபெரும் பேரணி ஒன்றை எங்கள் ஆந்தோலனுக்கு ஆதரவாக நடத்திக் காட்டி, நூற்றுக்கு மேற்பட்ட இயக்கங்கள் தங்கள் ஒத்துழைப்பைப் பறைசாற்றின. ஜப்பான், ஆஸ்திரேலியா போன்ற நாடுகளிலிருந்தெல்லாம் ஆதரவு குவிந்தது! இந்தியாவின் பிற மாநிலங்களிலிருந்தும் ஆதரவு வந்தவண்ணமிருக்கிறது. இத்தனைக்கும் மேலாக *'சர்தார் சரோவர் க்யா கரேகா? தேஷ் கா சத்யநாஷ் கரேகா''* (ச.ச. என்ன செய்யும்? தேசத்தை நாசம் செய்யும்?) என்ற எங்கள் கோஷத்தின் உண்மையான பொருள் ஒவ்வொரு இந்தியனையும் சென்று சேர்ந்திருக்கிறது. ஒரு டாக்சி டிரைவர் கூட உணர்ச்சி வசப்பட்டு ஒரு கவிதை இயற்றிப் பாடினார் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!'' என்று எப்படியும் அரசு மறுபரிசீலனைக்கு ஒத்துக் கொள்ளும் என்ற நம்பிக்கையோடுதான் நம்மிடம் பேசினார் மேதா பட்கர்.

அவரது நம்பிக்கை வீண் போகவில்லை! உண்ணாவிரதத்தின் பதினைந்தாவது நாள், மத்திய அரசு, திட்டத்தை மறுபரிசீலனை செய்வது குறித்துப் பேச்சு வார்த்தை நடத்துவதாக இசைவு தெரிவிக்க, அணைக்கட்டு கட்டப்படுவது உடனே நிறுத்தப்பட வேண்டுமென்ற கோரிக்கையை இவர்கள் தாற்காலிகமாக வாபஸ் பெற்றனர். மேதாவும் தம் உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்டு விட்டார். சாதகமான ஒரு முடிவை விரைவாக எதிர்நோக்கி, மேதாவும் அவருடைய ஆதரவாளர்களும், எண்ணிறந்த ஆதிவாசிகளும் நம்பிக்கையுடன் காத்திருக்கின்றனர்!

– ஜெயஸ்ரீ ராஜ்

படங்கள் உதவி :
'Afternoon Courier and Despatch'



எழில் கேசத்தின்
ரகசியம்!




# அஸ்வினி

ஹோமியோ ஹேர் ஆயில்

**புதிய நற்குணங்களுடன் கூடிய சுத்தமான தேங்காய் எண்ணெய் கலந்தது**

- பிசுபிசுப்பற்றது.
- நரைமுடி, மற்றும் முடி உதிர்வதைத் தடுக்கிறது.
- வளமான ஆரோக்கியமான முடி வளரத் தூண்டுகிறது.

இதற்கு மேலும் கூறிட வேண்டுமா...
இன்றே உபயோகித்துப் பாருங்கள்.

**அஸ்வினிக்கு நன்றி!**

வணக்கம். நான் தற்பொழுது தங்களின் அஸ்வினி ஹேர் ஆயிலை பயன்படுத்தி வருகின்றேன். அதை உபயோகித்ததில் இருந்து எனது தலைமுடி மிக நன்றாக வளரத் தொடங்கியுள்ளது. மேலும் ஒருவித உற்சாகத்தை உணர்கின்றேன்.

தங்களது தயாரிப்புக்கு எனது வாழ்த்துக்கள்.

ஜான்சி நாராயணன்
ஸ்ரீ மலர் மெடிக்கல்ஸ், சாயிபாபா காலனி
கோவை 641 011.

MAC/1510

தயாரிப்பாளர்:
அஸ்வினி ஹோமியோ பார்மஸி
5-283 A, HPரோடு, மூஸாபேட், ஹைதராபாத் 500 018.

அனைத்து பிரபல கடைகளிலும் கிடைக்கும்.

**விரைவில் எல்லோர் நினைவிலும் நிலைத்து நிற்கும் ஹேர் ஆயில் — அஸ்வினி!**

# ஐ லைக் இட்!




TAS Vision ● 028

**yankee doodle**
ice creams

For Details Contact:
SRI VENKATADRI ENTERPRISES
Flat 14, 250, Lloyds Road, Madras-86. Ph: 8278807

# "இதெல்லாம் தேவைதானா?"

அந்த அலுவலகத்தில் யாருக்குமே டெஸ்பாட்ச் ரங்கநாதனைப் பிடிக்கவில்லை.

சொல்லிவைத்தாற் போல் அத்தனை பேரும் வெறுத்தார்கள், ஓரிருவரைத் தவிர.

''ரொம்ப மோசம் சார்! அடுத்தவங்க விஷயத்திலே அளவுக்கதிகமாத் தலையிடறார்!''

''சே, என்ன மனுஷன்? கொஞ்சம் கூட இங்கிதம் இல்லாமே!''

''அன்னிக்கு என் சீட்டுக்கு வந்து டேபின் டிராயரைத் திறந்து, 'என்ன செல்வம்! உனக்கெதுக்கு இத்தனை போஸ்ட் கார்டும் கவரும்? நான் ரெண்டு கார்டு எடுத்துக்கறேன்'னு உருவி எடுத்துட்டு போய்க்கிட்டே இருக்காரு சார்!''

''லஞ்ச் டயத்திலே எங்கிட்டே வலிய வந்து 'வாவ்! எண்ணெயிலே வதக்கிய கத்தரிக்காயா? எனக்கு ரொம்பப் பிடிக்கும் ராஜன்!' அப்படின்னு என் எச்சில் பாத்திரத்தில் தன் எச்சில் கையை விட்டு... சீச்சீ, அசிங்கம்!''

''இதெல்லாம் பரவாயில்லே சார்! நீங்க ஜெண்ட்ஸ். என் புடவையைத் தொட்டு, ''ஸாரி செலக்ஷன் ரொம்ப டாப்பா பண்ணறீங்க ரம்யா! என் வீட்டிலேயும் இருக்குதே ஒரு மக்கு. ஒண்ணும் தெரியறதில்லே'ன்னு.... இதெல்லாம் தேவைதானா சார்?''

ஆள் ஆளுக்கு விமர்சனங்கள் கொடிகட்டிப் பறந்தன.

டெஸ்பாட்ச் ரங்கநாதன் அன்றைக்கு லீவில் இருந்தார்.

வாட்ச்மேன் வரதன் ஸ்டூலில் ஒடுங்கி உட்கார்ந்திருந்தான்.

''என்னப்பா வரதா! அந்த ஆளைப் பத்தி நீ என்ன நெனைக்கிறே?''

வரதன் தயங்கினான்.

''சும்மா சொல்லுப்பா! இதிலெல்லாம் பதவி வித்தியாசம் பார்க்கக் கூடாது!''

''ஆமா சார்! அவர் அனாவசியமா எல்லாரோட விஷயத்திலேயும் தலையிடறார். செல்வம் சாருக்குக் கல்யாணம் நடந்தப்போ எல்லாரும் அஞ்சோ, பத்தோ மொய் எழுதினாங்க. இவரு நூத்தி ஒரு ரூபா எழுதினாரு. ராஜன் சார் உடம்பு சுகமில்லாமே படுத்திருந்தாரே, அப்போ சில பேரு சும்மா போய்ப் பார்த்துட்டு வந்தாங்க. பல பேர் போகவே இல்லே. இவரு மட்டும் ஹார்லிக்ஸ் பாட்டிலும் பழங்களும் வாங்கிட்டுப் போய்ப் பார்த்தாரு. அன்னிக்கு திடீர்னு பஸ்களும் ஆட்டோக்களும் ஓடாமே ஸ்ட்ரைக் நடந்தப்போ எல்லாரும் அவங்க அவங்க வண்டியிலே போயிட்டாங்க. இவரு ரம்யாம்மாவைத் தன் ஸ்கூட்டரிலே கொண்டு போய் வீட்டிலே விட்டாரு. இதெல்லாம் தேவைதானா சார்?''

யாரும் பதில் சொல்லவில்லை.

- மீனாமணி



# ஸத்யாவுக்கு பத்து



ஜே.எஸ். பெல் என்பவர் 1964 இல் ஒரு புரட்சிகரமான விஷயத்தைச் சொன்னார். பிரபஞ்சத்தில் உள்ள அத்தனை விஷயங்களும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளது என்று நிருபித்தார். இரட்டையாக வெளிப்படும் எலக்ட்ரானைப் பிரித்து, இரு எதிர்த் திசைகளில் போகச் செய்து, அதில் ஒன்றை மட்டும் காந்த விசைக்கு உட்படுத்தினால் மற்றதும் எவ்வளவு தொலைவில் இருந்தாலும் மாறுதலுக்கு ஆளானது. இங்கு கால இடைவெளியில்லாத ஒரு தொடர்பு, எங்கோ நிகழ்வது, வேறு எங்கோ நிகழ்வதை உடனே பாதிக்கிறது. இதன்படி, மூடிய அறையில் இருவர் பேசிக் கொள்வது அவர்களை மட்டும் பாதிப்பதில்லை. மாறாக, பிரபஞ்சம் முழுவதையுமே ஏதோ ஒரு விதத்தில் பாதிக்கிறது.

**எச்சரிக்கை!**

'கதை' முடிய ஏழே வாரங்கள்!
திருமதி பாலா கண்ணன் அவர்களே!
வெளிநாட்டு ஆசையைப் பூர்த்தி
செய்யுங்கள்.

●●●

சந்தோஷ நிலையத்தில்
'எல்லாம்' கிடைக்கும்,

அத்யாயம் – **உ**

உயரமான அந்த நகரமும் மிகவும் ஆரவாரமாக இருந்தது. ஒட்டடைக் குச்சிகளாய் உயர்ந்து நின்ற கட்டடங்கள். காற்றைக் கிழிக்கும் கார்கள். பூலோக சொர்க்கமாய்க் கடைகள். நிறைய மக்கள். ஏறத்தாழ எல்லாரும் ஐந்தடி உயரத்தில் ஆஜானுபாகுவாய் இருந்தார்கள். வாட்ட சாட்டப் பெண்கள். வாகான பெண்கள்.

ஸ்ரீநிவாஸ குருவின் கண்கள் சாப்பிட்டன. வயிறும் கேட்டது. பராக்குப் பார்த்துக் கொண்டு நடந்தான். இவனை யாரும் பொருட்படுத்தவில்லை.

ஒரு மூடியிருந்த கடைவாசலில் ஒருவன் மிகப் பரிதாபமாக உட்கார்ந்திருந்தான். அவனைப் பார்த்த குரு சிநேகச் சிரிப்பு உதிர்த்தான். பதிலுக்கு அவன் சிரிப்பில் விரக்தி காட்டினான்.

''என்ன தம்பி சோகமா உட்கார்ந்துட்டே?''

''பசியில் சுகமாகவா உட்கார முடியும்?'' வயிறு தடவினான்.

''சாப்பிடுவதுதானே!''

''அதற்கு ரூ வேணுமே?'' தோள் குலுக்கினான்.

''ஏன் ரூ இல்லையா?''

''அதற்கு வேலை வேணுமே!'' ஆகாயம் பார்த்தான்.

''ஏன் வேலை கிடைக்கலியா?''

''இந்த பாழாய்ப் போன ஆத்மா எங்கள் வாழ்வில் சோகம் பூசுகிறது. அதை முதலில் ஒழிக்கணும். அதான் யோசிக்கிறேன்.'' உள்ளங்கை குத்தினான்.

வேலை.

வேலை.

வேலை.

''வேலை இல்லாதவர்க்கு ஓய்வில்லம் உண்டாமே?''

''இது உழைக்கும் வயது.'' முஷ்டி மடக்கினான்.

''உன் பெயர்?'' அருகமர்ந்தான் குரு.

''ஜோ.''

''ஜோ....வா! சாப்பிடப் போகலாம். நல்ல இடமாகக் காட்டு.'' ஆதரவாகக் கை

பிடித்தான்.

''ரூ?''

''வா... ஜோ. இந்தப் பெட்டி நிறைய ரூ இருக்கு. சாப்பிடலாம். குடிக்கலாம். பார்க்கலாம். வா.''

''நிறைய ரூ இருந்தால் பாதாள நிலையங்கள் போகலாம். அங்கு விரும்பியது கிடைக்கும்.''

''பாதாள நிலையமா?''

''பூமிக்குக் கீழேதான் சொர்க்கமே உள்ளது.''

''வா சொர்க்கத்தின் வாசலைத் தட்டுவோம்.''

குருவும், ஜோவும் அந்த லிப்டில் டிக்கட் பெற்று, பாதாள நிலையம் இறங்கினார்கள். கட்டுப்படுத்தப்பட்ட சந்தோஷம். இரவு பகல் இணைந்து ஒன்றான வாழ்க்கை. எங்கும் வண்ணம். விளக்குகள் கண்ணடித்தன. அதிர்ந்தன. அழைத்தன. சூடாக்கின. தேவதைகள். சொர்க்கம். நரகத்தில் தள்ளிவிடும் சொர்க்கம்.

அந்த உணவு நிலையத்தின் நகரும் படிகள் குருவையும், ஜோவையும் அலுங்காமல் இழுத்துச் சென்று, காலியான டேபிள் முன் நின்றது. அமர்ந்தார்கள். உடனே டேபிளின் மீது உணவு வகைகளின் பெயர்கள் ஒளிர்ந்தன.

''சார் என்ன வேண்டும்?''

''மிகச் சுவையானது.''

ஜோ சில புரியாத அயிட்டங்களின் பெயருக்கு நேராக பட்டன்களைத் தட்டினான். இரண்டாம் நிமிடத்தில் ஆவி பறக்க உணவு, நகரும் நீண்ட பாதையில் வழுக்கி வந்து, இவர்கள் மேஜை முன் நின்றது.

''ஜோ டிரிங்க்ஸ் வேணுமே!''

''உற்சாக பானம்?''

''அதே....''

உடனே, ஜோ மேலும் சில பட்டன்களை அழுத்திக் கொடுக்க, உற்சாக பானம் வந்தது. கொஞ்ச அளவில் குரு சொக்க ஆரம்பித்தான்.

''ஜோ அடுத்தது கிடைக்குமா?''

''யூ மீன்?''

''பெண்.''

''தாராளமாக. சந்தோஷ நிலையத்தில் வேண்டிய அளவில் கிடைப்பார்கள். போகலாமா?''

அடுத்த நிமிடங்களில், சந்தோஷ நிலையம் எண் 5 ன் முன் இருந்தார்கள். இந்திரலோகம் போல இருந்தது. வர்வேற்புப் பெண்ணே மேனகை போல கலங்க



அடித்தான்.

''சார் வேணுங்கிறத செலக்ட் பண்ணிக்குங்க. நல்லா அனுபவிங்க. சாரி... உங்க பேரைக் கூட கேக்கலியே. நல்ல பசி சமயத்தில் கடவுள் மாதிரி வந்து உதவினீர்கள்.''

''கடவுள் என்றே வைத்துக் கொள்ளேன்.''

''கடவுளே ரொம்ப நன்றி. ஹேவ் எ நைஸ் கம்பெனி.'' ஜோ திரும்பினான்.

''ஏன் ஜோ நீ வரலியா? வா... ரூ பற்றிக் கவலை வேண்டாம். நான் பாத்துக்கறேன்.''

''இல்ல கடவுளே! என்று சுயமாக வேலை கிடைத்து உழைத்துச் சம்பாதிக்கிறேனோ, அன்றுதான் பெண் பற்றிக் கனவு காண்பது என்று சங்கல்பம் செய்திருக்கிறேன். நீங்க அனுபவிங்க கடவுளே.'' ஜோ போய்விட்டான்.

அந்த அழகிய யுவதி குருவை அந்தக் கருவியில் நிற்கச் சொன்னாள். சில வயர்களை நெற்றியில் ஒட்டினாள். அடுத்த நிமிடம் ஒரு அட்டை கருவியிலிருந்து வெளி வந்தது.

இரத்த அழுத்தம் : 80 - 150
அதிக பட்சம் : 180
இதயத் துடிப்பு : 80
அதிக பட்சம் : 90
எடை : 80
அனுமதி பெண் : C பிரிவு

''இது என்ன சோதனை பெண்ணே?''

''நீங்கள் புதிதாய் வருகிறீர்களா? இது உங்களைப் பற்றின விவரம். இங்கு பல பிரிவுப் பெண்கள் இருக்கிறார்கள். A- பிரிவுப் பெண்கள் அதி அழகானவர்கள். உங்கள் இதயத் துடிப்பும் இரத்த அழுத்தமும் நார்மலாக இல்லை. அதி அழகுப் பெண்களைப் பார்த்தால், உங்கள் இதயத் துடிப்பு மிக எகிறி விபரீதம் நடக்கலாம். எனவே உங்கள் உடம்புக்கு ஏற்றது C- பிரிவு பெண்கள். எல்லாம் கம்ப்யூட்டர் தீர்மானிக்கும்.''

''பெண்தானே வருவாள்? இல்ல கம்ப்யூட்டர் வருமா?''

''கவலை வேண்டாம் C- பிரிவு பெண் தான். இந்தப் பாரத்தை நிரப்பிக் கொடுங்கள்.''

*C- பிரிவு X1010*
*நிறம் -*
*அளவு -*
*உயரம் -*
*முடி -*
*நேரம் -*
*அலுவலக உபயோகம்*
*அனுமதி :*

குரு நிரப்பித் தந்தான். அடுத்த நிமிடம் அந்தப் பெண் கேட்ட அளவுகளில் வந்தாள். குருவின் இதயம் குதிக்க ஆரம்பித்தது. C- பிரிவே இப்படி. எனில் A- என்றால், பார்த்தாலே செத்துடுவோமோ?

''விருந்தினரே வாருங்கள்.''

''பெண்ணே உன் பெயர் என்ன?''



மாமியார் : உனக்குச் சமைக்கத் தெரியலே, பாட்டுப் பாடத் தெரியலே, ஒரு வேலையும் தெரியலே! என்னதான் தெரியும் உனக்கு?
மருமகள் : எனக்குக் கராத்தே தெரியுமத்தே!...

– 'வனம்'

''ஷில்வி.''

''லவ்லி.''

''......''

''என்ன பேசாமல் நிற்கிறாய்?''

''அழைத்தால் வருவேன்.''

''அழைக்கிறேன் வா.

''ஒரு நாள் உன்னுடன் இருக்க ரூ தந்திருக்கிறேன். எங்காவது வெளியே போகலாமா?''

''சினிமா? பார்? ஸ்விம்மிங்?''

''வெல் ஸ்விம்மிங்!'' குளித்து எத்தனை நாள் ஆகிறது....

''தெரியும்... அதான் சொல்வீர்கள் என்று. என்னை அப்படிப் பார்ப்பதில் அவசரம்!'' ஷில்வி கண்ணடித்தாள்.

அமைதியான ப்ளுமூன் நீச்சல் குளத்தின் துல்லியமான நீருக்குள் இழுத்தான். அணைத்தான். ஷில்வி மூச்சுத் திணறினாள். இண்டர்வெல்லாய் கொஞ்ச நேரம் உட்கார்ந்தார்கள்.

பறவைப் பார்வை பார்க்க ஷில்வியை

விட உயரமான படியில் அமர்ந்து தன்னை நீருக்குள் சொருகிக் கொண்டிருந்த இன்னொருத்தியைப் பார்த்தான் குரு.

''அங்க என்ன பார்வை நானிருக்கும் போது?'' ஷிவ்லியின் வார்த்தை கோபம் காட்டி முகம் அடைலாடியது.

''நான் கேட்டதைத் தராததால் கோபம்.''

''அவளை விழுங்குவது மாதிரி பார்த்தாயே இப்போது பார்.'' என்றவள் நீரில் குறிப்பிட்ட இடைவெளியில் குதித்துக் கொண்டிருந்த அந்தப் பெண்ணை அழைத்தாள். அவள் குலுங்கக் குலுங்க வந்தாள். ஷிவ்லி அவளின் ஸ்விம்மிங் மேலுடை கழற்றப் குரு பரபரப்பானான்.

ஷிவ்லி அவளின் ஒரு மார்பைப் பிடித்துத் திருக அது கையோடு வந்தது.

''அந்தப் பெண் மெஷினா?''

''ஹியூமனாய்ட்.''

''என் வயது 518.''

''என்ன 518 ஆ!''

''நான் பிறந்த வருடம் 1956.''

''விளையாடறியா'' ஷிவ்லி பயத்தில் எழுந்து கேட்டாள்.

''நம்பு, நிஜம்தான்.''

''அதெப்படி சாத்தியம்? இத்தனை நாள் எங்கிருந்தாய்?''

''அதை மட்டும் கேட்காதே.''

பாவம் ஷிவ்லி. தொட்டிலை ஆட்டி குழந்தையைக் கிள்ளாதே!

''சொல்லுங்க மிஸ்டர்...''

''ஸ்ரீநிவாஸ குரு...''

''இத்தனை நாள் என்ன செய்தீர்கள்?''

''உழைத்தேன்.''

''எங்கே?''

''வேண்டாம். உங்க கணவர் பாவம். குழந்தைகள் பாவம்.''

''நோ... சொல்லித்தான் ஆகணும்.

பெண்ணின் தந்தை : பெண்ணை பார்த்தாச்சு, பஜ்ஜியை சாப்பிட்டாச்சு. அப்புறம் உங்க அபிப்பிராயத்தைச் சொல்லுங்க!
பையனின் தந்தை : பஜ்ஜியில ஒரு சிட்டிகை உப்பு குறைச்சலா இருக்கு!
- என். முகம்மது யூசுப்.



''நீ பெண்தானே ஷிவ்லி.''

''சந்தேகமா?''

''ஷிவ்லி உனக்குக் குடும்பம் கிடையாதா?''

''தாராளமாய். கணவன் குழந்தைகள்.''

''பின் ஏன் இப்படி?''

''இதிலென்ன தப்பு. சந்தோஷம் தருகிறேன், ரூ கிடைக்கிறது. இதுவும் ஒரு வேலைதான். எனக்கு, கணவருக்கு, குழந்தைகளுக்கு ரூ தேவை.''

''கணவன் சம்பளம் போதலியா?''

''அவருக்கு வேலை கிடைக்கவில்லை. எனக்கும் இதைத் தவிர ரூ பெற வேறு வேலை கிடைக்கவில்லை.''

''ஆமாம் என்னைப் பற்றி நீ ஒன்றும் கேட்கவில்லையே!''

''நானே நினைத்தேன். நீ புதிதாய் இருக்கிறாய். நீ வேறு நாட்டுக்காரனா?''

''இல்லை இதுதான் என் நாடு.''

''வயதான மாதிரி தெரிகிறாய். இறுதி இல்லத்தில் இருந்து வருகிறாயா? அங்கு கிடைக்காத சொர்க்கமா?''

கணவர் ஒன்றும் சொல்ல மாட்டார்.''

அவளே தூண்டிலுக்கு வருகையில் உனக்கென்ன?

''சரி கேள் ஷிவ்லி.''

''..................................................
..................................................
..................................................''

ஸ்ரீநிவாஸ குரு, அறையைவிட்டு சாவகாசமாக வெளியேறி சந்தோஷ நிலய வரவேற்புப் பெண்ணிடம் கண் சிமிட்டி, தரையை அடைகையில், ஷிவ்லி இதுவரை இவ்வுலகில் இருந்ததற்கான அடையாள மின்றி மாயமாய் மறைந்திருந்தாள்.

கவரில் லிப்ஸ்டிக் கிறுக்கல்.

'ஜுஹா அழைக்கிறாள்'.

'ஆத்மாவுக்கு ஆபத்து.'

குரு பாதாள ரயிலில் அடுத்த நகர் நோக்கி அதி விரைந்தான்.

(தொடரும்)

# “தாயும் தெய்





**மே**ற்படி டயலாக் இன்று தமிழகத்தின் சகல சந்து பொந்து களிலும் எதிரொலிப்பது. ''இது வெறுமனே சினிமாவுக்காக மட்டும் எழுதப்பட்ட டயலாக் இல்லை, புத்தி தெளிந்த நாளிலிருந்து நான் உணர்ந்த உண்மை!'' என்கிறார் ராஜ்கிரண். பாம்குரோவ் ஹோட்டலில் அடுத்த படத்து டிஸ்கஷனில் உட்கார்ந்திருந்த அவரைச் சந்தித்த போது :

**எஸ்.எஸ்.எல்.ஸி. வரை பணக்காரன்!**

ராமநாதபுரம் மாவட்டத்தில் கீழக்கரை எனது சொந்த ஊர். அப்பாவுக்கு சிலோன்ல ஒரு இரும்புக் கடைல வேலை. என்ன வேலைன்னு அப்ப எனக்குத் தெரியாது. நான், எங்கம்மாவெல்லாம் எங்க பெரியப்பா பாதுகாப்புல இருந்தோம். அப்பா சிலோன்லேர்ந்து கலர் கலரா டிரெஸ்ஸெல்லாம் அனுப்புவாரு. அப்ப நான் படிச்ச ஸ்கூல்ல, பளபளன்னு நிஜார், சட்டை போடறவன் நான்தான். மனசுக்குள்ளே ரொம்பப் பெருமையா இருக்கும். 'ஆஹா, நாம எவ்ளோ பணக்காரங்களா இருக்கோம்' அப்படீன்னு.

இருந்தாலும் ஒரு சந்தேகம். மூணு வேளை சாப்பிடறோம். நல்லா உடுத்தறோம். சந்தோஷமா இருக்கோம். அப்புறம் எதுக்கு அம்மா இடியாப்பம் விக்கறாங்கன்னு. பெரியப்பாகிட்டே கேட்டேன். அவர் சொன்னார், ''பொம்பளைங்க ஒரு வேலையும் செய்யாம சும்மா இருக்கக் கூடாதுடா. அதனாலதான் உங்கம்மா இடியாப்பம் விக்கறா'' அப்படீன்னு. சரிதான்னு சும்மா இருந்துட்டேன்.

எஸ்.எஸ்.எல்.ஸி. முடிக்கிற வரைக்கும் விஷயம் தெரியாது. எஸ்.எஸ்.எல்.ஸி. பாஸ் பண்ணிட்டு மேல படிக்கணும்னு வரும் போதுதான் எனக்கு வீட்டு நிலைமை புரிஞ்சுது. மேல படிக்க வைக்க முடியாத ஏழைமை! இத்தனை நாள் சாப்பிட்டுட்டு இருந்ததே இடியாப்பம் வித்த காசுலதான்னு தெரிஞ்சுது.

அவ்வளவுதான்! யோசிக்க ஆரம்பிச்சேன். இத்தனை நாள் ஒரு கஷ்டம் தெரியாம நம்ம அம்மா வளர்த்திருக்காங்களே இதுக்கு அவங்க எவ்ளோ கஷ்டப்பட்டிருக்கணும்னு. அத்தோட படிப்பு முடிஞ்சுது. மனசுக்குள்ளே பயங்கர வெறி. 'நிஜமாவே பணக்காரனா ஆகணும். அம்மாவை ராணி மாதிரி வெச்சிருக்கணும்' அப்படீன்னு.

# தான்; பொஞ்சாதியும் தெய்வம் தான்!”

மெட்ராஸ் வந்துட்டேன்.

### மூன்று ரூபாய் உத்தியோகம்

மெட்ராஸ் வந்து முதன்முதலா நான் சேர்ந்த இடம், ஒரு டிஸ்ட்ரிப்யூஷன் ஆபீஸ். ஃபிலிம் ரெப்ரஸன்டேட்டிவ் வேலை. ஊரு ஊரா பொட்டி தூக்கிட்டுப் போகணும். ஒரு நாளைக்கு மூணு ரூபா சம்பளம். அதுவும் வேலை இருந்தாத்தான். வேலைக்கு உத்தர வாதமெல்லாம் ஒண்ணும் கிடையாது. வேலை இருக்கிற அன்னிக்கு ஒண்ணரை ரூபா பேட்டா கிடைக்கும். அதை சேர்த்து வெச்சாத்தான் வேலை இல்லாத அன்னிக்குச் சாப்பிட முடியும். எனக்கு, நான் சாப் பிடறதை விட அம்மாவுக்கு பணம் அனுப் பறதுதான் ஒரே சிந்தனை.

கொஞ்ச நாள் ரொம்ப கஷ்டப்பட் டேன். அப்புறம் என் சின்ஸியாரிட்டி பார்த் துட்டு அதே ஆபீஸ்ல கிளார்க்காப் போட் டாங்க. கொஞ்சம் மூச்சு விட முடிஞ்சது. இருபத்தஞ்சு ரூபா சம்பளம். வீட்டுக்குப் பதினைஞ்சு ரூபா அனுப்பிடுவேன். எனக்கு என்ன ஒரே லாபம்னா, டிஸ்ட்ரிப்யூஷன் பத்தி ஓரளவுக்கு க்ளியராப் புரிஞ்சிக்க முடிஞ்சது. அதில் இருக்கற நெளிவு சுளி வுகள் கொஞ்சம் கொஞ்சமா தெரிய ஆரம் பிச்சது.

### 25000 தந்த Break

வீட்ல கல்யாணம் பண்ணிடலாம் பையனுக்குன்னு டிஸைட் பண்ணாங்க. நான் சந்தோஷமா ஒத்துக்கிட்டேன். கார ணம், 25,000 வரதட்சணை! வரதட்சணை வாங்கறது தப்பு, சமூகக் குற்றம் - இதெல் லாம் அப்ப எனக்குத் தெரிஞ்சிருந்தாலும்



ஒத்துக்கக்கூடிய நிலையில் நான் இல்லை. அப்ப எனக்குத் தேவை பணம். தட்ஸ் ஆல்!

### ஓடுமா? ஓடாதா?

வந்த பணத்தை வெச்சி சொந்தமா டிஸ்ட்ரிப்யூஷன் செய்ய ஆரம்பிச்சேன். சின்ன வயசிலேர்ந்தே கடவுள் எனக்கொரு திறமையைக் கொடுத்திருந்தார். ஒரு கதையைக் கேட்டவுடனே, இது படமானா ஓடுமா, ஓடாதான்னு கரெக்டா சொல்லிடுவேன். இந்த லைனுக்கு வந்த போது அந்தத் திறமை ரொம்ப உபயோகமா இருந்தது. 'ராஜ்கிரண் வாங்கியிருக்கான்யா, நம்பி நாமும் வாங்கலாம்' அப்படீன்னு மத்த டிஸ்ட்ரிப்யூட்டர்கள் சொல்லுவாங்களாம். படத்தில் ஏதாவது இடிக்கிற மாதிரி தெரிஞ்சதுன்னா ப்ரொட்யூஸர்கிட்டே மாத்தச் சொல்லுவேன். அப்படி மாத்தி சக்ஸஸ் ஆன படங்கள் எக்கச்சக்கம்.

ஆனா இந்த மாதிரி விஷயம் தெரிஞ்ச அளவுக்கு எனக்கு நிர்வாகத் திறமை இல்லை. யார் யாரோ ஏமாத்தினாங்க. கண்ணு முன்னாடி தலைல மிளகாய் அரைச்சாங்க. தொழில் டவுன் ஆச்சு. எட்டு வருஷம்! எழுந்துக்க முடியாம கஷ்டப்பட்டேன். அப்ப நான் முதல்ல வேலை செஞ்ச கம்பெனிக்காரங்க கூப்பிட்டு ஹெல்ப் பண்ணாங்க. ஒரு வாசல் மூடினா இன்னொண்ணு திறந்துதானே ஆகணும்? ப்ரொட்யூஸர் ஆனேன்.

### தலையீடே என் தலையாய பணி

நேர்மை, சத்தியம், கருணை இதெல்லாம் நமக்கு மட்டும் இருந்தால் போதாதுன்னு அந்த எட்டு வருஷத்துல புரிஞ்சிக்கிட்டேன். புரொட்யூஸரான போது, முன்பு எனக்கு நேர்ந்த அனுபவங்கள் கைகொடுத்தன. இதுவரைக்கும் மூணு படம்தான் பண்ணியிருக்கேன். மூணும் ஹிட்! ராஜ்கிரண் டைரக்டரை ஃப்ரீயா விட மாட்டார், எல்லா ஸ்டேஜ்லயும் தலையிட்டுக்கிட்டே இருப்பார்னு சொல்றாங்க. அஃப்கோர்ஸ் அது 100% உண்மை. தலையிடறது என் தலையாய பணின்னு நினைக்கறேன். நான் அடிபட்டவன். திரும்பத் திரும்ப அடிபடத் தயாராயில்லே. எதையும் பர்ஃபெக்டா பண்ணணும்னு நினைக்கிறவன் நான். என் படங்களின் ஒவ்வொரு செண்ட்டி மீட்டர்லயும் நான் இருப்பேன்!

### நடிச்சா என்ன?

நான் வெறுமனே தயாரிப்பாளரா மட்டும் இருந்து பண்ண படங்களில் நடிகர்களுக்கு ஒவ்வொரு ஸீனையும் நானே நடிச்சுக் காமிப்பேன். அஃப்கோர்ஸ், அது டைரக்டரோட வேலைதான் என்றாலும் என்னால சும்மா இருக்க முடியாது. சரிதான்; நடிப்பு சொல்லிக் கொடுக்க வருதே, நாமே நடிச்சா என்னன்னு தோணிச்சு. 'ராசாவின் மனசிலே'ல நடிக்க ஆரம்பிச்சுட்டேன்.

### முகமா முக்கியம்?

ஹீரோ, ஸ்டைலா இருக்கணும், ஹீரோயின் பளபளன்னு இருக்கணும் அப்படீங்கறதெல்லாம் சுத்த ஹம்பக். ஹீரோ மூஞ்சிக்காக எந்தப் படமும் ஓடினதில்லை. உடனே கேப்பீங்க, எம்.ஜி.ஆர். படம் ஓடலியா, ரஜினி படம் ஓடலியா அப்படீன்னு. ஹீரோவுக்காக மட்டுமே ஒரு படம் ஓடும்னா, ரஜினி படம் எத்தனை ஃபெயிலியர் ஆகியிருக்கு? எம்.ஜி.ஆர். படங்கள் ஃபெயிலியர் ஆகலை? அதே மாதிரிதான் டைரக்டருக்காக படம் ஓடறது, கேமராவுக்காகப் படம் ஓடறது அப்படீங்கறதெல்லாம் விஷயம் தெரியாதவங்க சொல்றது. ஒரு படம் ஓடறதும் ஓடாததும் அந்தக் கதையைப் பொறுத்த விஷயம்!

என் முகத்தை ஜனங்க ஒத்துக்கிட்டாங்கன்னா, அதுல ஆச்சர்யப்பட ஒண்ணுமே இல்ல. 'ராசாவின் மனசிலே' படத்தில் ராஜ்

"வாசலிலே புலவர் யாராவது இருக்காரா பாருங்கள்... மந்திரியாரே."

"எதற்கு மன்னவா?"

"பட்டத்து யானையைப் பரிசளிக்கத்தான். தீனி போட்டுக் கட்டுப்படி ஆகலியே!"

- கே. வி.





"ஏண்டா, இருட்டுல வரே, சைக்கிள்ல லைட் இல்லே; பெல், பிரேக் எதுவுமே இல்லை... எடு பத்து ரூபா...!"

"நல்ல இருட்டுதான்; சரியா பாருங்க சார்.... சைக்கிளே இல்லை... நான் நடந்துதான் வர்றேன்!..."

- வி.கி. குமார்.

கிரன் தெரிய மாட்டான். அந்த மாயாண்டி தான் முன்னாடி நிப்பான். அரண்மனைக் கிளியும் ராஜ்கிரணுக்காக ஓடலை. 'ராசையா'வுக்காகத்தான்! இதில் எனக்கு சந்தேகமே இல்லை.

## பேண்ட் போடத் தயார்

முரட்டுத்தனமா டப்பாக்கட்டு கட்டிக்கட்டு, சாராய பாட்டிலோட எத்தனை நாளைக்கு ஓட்ட முடியும்னு கேக்கறாங்க. எனக்கு என்னோட கெட்-அப் முக்கியமே இல்லை. நான் சொல்ல நினைக்கிற விஷயத்துக்கு எந்த கெட்அப் சரிப்படுமோ அதுல வர்றேன். போன ரெண்டு படமும் வில்லேஜ் சப்ஜெக்டா சொன்னாத்தான் அப்பீலாகும்னு பட்டுது. ஸோ, அந்த மாதிரி என் கேரக்டரை பில்ட் அப் பண்ணேன். நாளைக்கே ஒரு விஷயம் ஸிட்டி சப்ஜெக்டா சொன்னாத்தான் ஒர்க் அவுட் ஆகும்னு தோணிச்சின்னா பேண்ட் போடத் தயார்!

## கிளி பிறந்த கதை

அரண்மனைக் கிளியோட சக்ஸஸ் எதிர்பார்த்ததுதான். அந்தப் படத்துல நான் சொல்ல வந்த விஷயம், 'எத்தனை ஜென்மம் எடுத்தாலும் தாய்க்குப் பட்ட கடன் தீராது' அப்படீங்கறது. இந்த 'நாட்' எனக்குச் சிக்கினது இளையராஜாகிட்டேயிருந்து. அவர்தான் ஒருமுறை இது பத்தி ரொம்பத் தீவிரமாப் பேசிக்கிட்டிருந்தார். தாய்ப்பாசம்கிறது வெறும் சினிமா விஷயமா மட்டுமே இப்போ மாறிக்கிட்டு வருது. இதைப் பார்த்தா பயம்மா இருக்கு. எத்தனையோ பேர் தனக்கும், தன் பெண்டாட்டி பிள்ளைகளுக்கும் செய்துக்கற வசதிகளிலே நூத்துல ஒரு பங்கு கூட தாய்க்குச் செய்யறதில்லை. நானே இது மாதிரி பல பேரைக் கண்ணால பார்த்திருக்கேன். இந்த விஷயம் என்னை ரொம்பப் பாதிச்சது. புத்தர் மாதிரி போதனை பண்ண எனக்கு என்ன தகுதி இருக்கு? என்னோட மீடியா மூலமா என் ஆதங்கத்தை வெளிப்படுத்தினேன். அவ்வளவுதான்! 'அந்த' டயலாக் ரொம்ப ஃபேமஸா ஆயிடுச்சி. ஆனா அது வெறும் சினிமா டயலாக்கா மட்டும் அப்பீல் ஆகலைங்கிறது சந்தோஷமா இருக்கு. நானும் வசூல் சக்ஸஸ் ஆகணும்கிறதுக்காக அதை எழுதலை. மனசார நான் அதை உணர்கிறேன். அந்தக் கருத்தை மிகவும் மதிக்கிறேன். சந்தேகமா இருந்தா என் மனைவியைக் கேட்டுக்கலாம்!

சந்திப்பு : பா.ராகவன்

ராஜ்கிரண் வண்ணப் படங்கள் : கோபிநாத்



"அத்தே... வெளில வாங்க... கபாலி கூப்பிடறான்!"

"இதோ பாருடி... தைரியமிருந்தா என்கிட்ட நேரடியா மோது... ரௌடியை ஏற்பாடு பண்ற நீ ஒரு கோழை!"

- எம்.எஸ். ருக்மணி.



"என்ன டிரைவர் சார், தஞ்சாவூரிலே பஸ்ஸை நிறுத்தாம வந்துட்டீங்க. நான் அங்கே இறங்கியிருக்கணும்!"

"கொஞ்சம் அசந்துட்டேன். நீங்களாச்சும் கொஞ்சம் எழுப்பி இருக்கக் கூடாதா?"

- ஆர்.ஆர். பூபதி.

"வர வர நம்ம தொகுதி மக்கள் ரொம்பக் கெட்டுப் போயிட்டாங்க...!"

"அப்படி என்ன பண்ணிட்டாங்க?"

"நம்ம தொகுதிப் பக்கம், தலை காட்டாதது கார்ப்பரேஷன் தண்ணியா, எம்.எல்.ஏ வான்னு பட்டி மன்றம் நடத்துறாங்க!"

- உ.ரா. சங்கர்.



## 26. துறவிக்கு அரண்மனை துரும்பு!

ஜீவராசிகளுக்கு உயிர் மீது உள்ள ஆசை அபரிமிதமானது. உயிருக்கு ஆபத்து என்று வரும் போது எதிர்ப்பவை எத்தனை வலியதாக இருந்தாலும் திரும்பி எதிர்த்துப் போராட எந்த உயிரும் தவறுவதில்லை. மூலையில் மடக்கப் படும்போது பூனையும் புலியாகிறது. பசுவும் தான் அதிகமாகத் துன்புறுத்தப்படும் போது திரும்பித் தனது கொம்புகளை ஆயுதமாகப் பயன்படுத்துகிறது. இயற்கையின் இந்த நியதிக்கு மனித இனம் விதிவிலக்கல்ல.

அந்தக் காரிருளில், பிரளய வர்ஷமாகப் பொழிந்த மழையில், உடல் நீராலும் உள்ளம் அச்சத்தாலும் நடுங்க, அந்த விஹாரத்தின் கதவுகளைத் தட்டிச் சலித்த கார்குழலி, பொத்தகுட்டன் கையில் பிடித்த குறுவாளுடன் தன்னை நெருங்குவதைக் கண்டு, இன்னும் நடுங்கியபடி கதவுகளை விட்டு சுவரோடு சுவராக மூலைக்கு நகர்ந்தாள். அவளது கரிய அகன்ற விழிகள் மருண்டு பொத்தகுட்டனைப் பார்த்தன.

கால்களில் ஏதோ இடறியது. சட்டென்று குனிந்து அதை எடுத்தவள், அது புத்த விஹாரத்தின் முகப்பில் சற்று உயரே இருந்த விளக்குகளை மாட்ட உதவும் கழி என்பதைக் கண்டுகொண்டாள். அதன் முனையில் சற்று வளைந்த கூரான இரும்புக் கம்பியொன்று செருகப்பட்டிருந்தது. எதிர்பாராமல் ஆயுதம் ஒன்று கையில் கிடைத்ததும் சற்று துணிவு பிறந்தது அவளுக்கு. தன்னை வளர்த்த சேரநாட்டுக் கோட்டைத் தலைவன் தனக்களித்த பயிற்சிகளை ஒரு முறை நினைத்தவள், தன்னை நெருங்கி விட்ட பொத்தகுட்டனை நோக்கி அதைத் தன் பலங்கொண்ட மட்டும் வீசினாள்.

# பாண்டியன் மகள்

இப்படியொரு ஆயுதம் அவள் கரங்களில் சிக்குமென்பதையோ, தன்னை எதிர்க்க அவள் துணிவாளென்பதையோ சற்றும் எதிர்பார்த்திராத பொத்தகுட்டன், கழுத்தில் ஆழப் பதிந்து இழுத்துத் தள்ளிய அந்தக் கொக்கி பதிந்த கழியால் நிலைகுலைந்து, அந்த விஹாரமே அதிரக் கூச்சலிட்டான். அவன் குறுவாள் நழுவிக் கீழே விழுந்தது. அதே விநாடியில் விஹாரத்தின் கதவு திறந்தது. காற்றில் அலைபாய்ந்த விளக்கொன்றுடன் புத்தபிட்சு ஒருவர் நின்றார். பொத்தகுட்டன் திரும்பித் தள்ளாடியபடியே கழியைக் கையில் பிடித்தபடி ஓடினான். அந்த மழையில் வெகு தூரம் செல்ல அவனால் இயலவில்லை. கழுத்தின் குருதி நாளங்கள் வெட்டப்பட்டு ரத்தம் ஆறாகப் பெருக, தள்ளாடி, சேற்றில் விழுந்தான். அவன் மீது விழுந்த மழைநீர் சிவப்பாக மாறி சேற்றில்



கலந்தது.

மூலையில் பெண்ணொருத்தி அஞ்சி நிற்பதையும் ஒருவன் வெளியே ஓடுவதையும் கண்ட துறவி, கார்குழலியை அழைத்துக் கொண்டு உள்ளே சென்றார். நீண்ட தாழ்வரையைக் கடந்து மண்டபத்தை அடைந்தவர், மரப் பேழையொன்றைத் திறந்து நூல் சேலையொன்றை எடுத்து அவவிடம் நீட்டினார்.

''மகளே, இங்கு கட்டடப் பணி செய்பவர்களுக்காகப் பொருள் கொடுத்துப் பெற்று வந்து வைக்கப்பட்டுள்ள சேலைகளில் ஒன்று இது. உன் ஈர உடைகளை மாற்றிக் கொள்'' என்றார்.

அருகிலிருந்த அறைக்குள் சென்று, உடையை மாற்றிக் கொண்டு வந்த கார்குழலியைத் துறவியின் அருள் நிறைந்த விழிகள் கனிவுடன் நோக்கின. ''அஞ்ச வேண்டாம் மகளே. இனி உனக்கு எந்த ஆபத்துமில்லை. நீ யார்? எப்படி இங்கு வந்தாய்? விவரமாகச் சொல்'' என்றார் துறவி.

**கா**ர்குழலியின் விழிகள் அந்த பிரும்மாண்டமான புத்தர் சிலையின் மீது பதிந்தன. புத்தரின் அன்பு விழிகளில் கருணையும் சாந்தியும் நிலவின. அந்த மண்டபத்தில் சுவர்களெங்கும் புத்தரின் திருவுருவம் குழந்தையாகவும், அரச போகத்தில் மிதந்த சித்தார்த்தனாகவும், போதி மரத்தடியில் உலகை வெறுத்து அமர்ந்து விட்ட போதி சத்துவராகவும் செதுக்கப்பட்டிருந்தன. அமைதியாக ஒளி வீசிய மணி விளக்கும் கருணை பொங்க அமர்ந்திருந்த துறவியும் அவள் மனதில் அமைதியும் சாந்தியும் ஏற்படுத்தவே, மெல்லத் தனது கதையைத்

விஷ்வக்சேனன்

துறவியிடம் கூறத் தொடங்கினாள் கார்குழலி.

அனைத்தையும் பொறுமையாகக் கேட்ட துறவியின் முகத்தில் பெரும் சோகம் படர்ந்தது. ''உலக வாழ்க்கை எத்தனை கொடுமையானது கண்டாயா மகளே. அன்பு வழி எத்தனை அமைதியானது. ஏனோ மக்கள் இதை உணர மறுக்கிறார்கள்'' என்று நொந்து கொண்ட துறவி, ''மகளே நீ சென்று ஓய்வெடுத்துக் கொள். விடிந்தபின் நானே உன்னை உரிய இடத்தில் சென்று சேர்க்கிறேன்'' என்றவர், எழுந்து உள்ளே நடந்தார்.

மறு கோடியிலிருந்த பெரும் அறையில் கட்டடப் பணிபுரிய வந்த ஆண்களும் பெண்களும் குழந்தைகளுடன் கவலையின்றி நிம்மதியாக உறங்கிக் கொண்டிருக்க, அதே அறைக்குள் சென்று படுத்த கார்குழலிக்கு மட்டும் உறக்கம் எளிதில் வரவில்லை.

'இப்படிக் கவலையின்றி உழைத்து உறங்கும் சாதாரணப் பெண்ணாக நான் பிறந்திருக்கக் கூடாதா? அரச குடும்பத்தில் ஏன் பிறந்தேன்? சிறு வயதில் தாய் தந்தையரைப் பிரிந்தேன். வளர்ப்புத் தந்தையையும் பிரிந்தேன். பின் தாயைக் கண்டேன். இன்று தாயையும் பிரிந்தேன். துறவி கூறுவது போல் உலக வாழ்க்கை துன்பமயமானதுதான். உறவும் பிரிவும் மனதை எத்தனை வாட்டுகின்றன?'

என்னதான் அவள் மனம் உலகை வெறுத்தாலும் ஊடே தோன்றிய விக்கிரமனின் வீரமுகம் மீண்டும் அவளை இந்த உலகிற்கு இழுத்தது. 'இந்த நிலையில் நானிருப்பதை அவர் அறிவாரா? என்னைத் தேடி எங்கெல்லாம் அலைகிறாரோ? நீண்ட வாளும் கூரிய அறிவும் உடைய அவரது நண்பர் உடனிருந்தால் அவருக்கு எத்தனை உதவியாகவும் ஆறுதலாகவும் இருக்கும்?'

அவள் சிந்தனையையும் மீறி நித்திராதேவி அவளை மெல்ல ஆட்கொண்டாள். வெளியில் மழை சற்று மட்டுப்படத் தொடங்கியிருந்தது.

**சே**ற்றில் புதைந்த கால்களை சிரமத்துடன் விடுவித்தபடி நடந்தான் மார்க்கியன். கார்குழலியைக் கொல்லாமல் விட்டது எத்தனை பெரும் தவறு என்று அவன் மனம் அவனை இடித்துக் கூறியது. அவளை உயிருடன் பிடித்து வரத் தனக்கு உத்தரவிட்ட ஈழ மன்னனை சபித்தபடி விஹாரத்தை நெருங்கியவனது கால்களில் ஏதோ இடறியது. குனிந்து கீழே பார்த்தவன் ரத்தத்தைப் பரப்பியபடி விழுந்து கிடந்த பொத்தருட்டனைக் கண்டு எரிமலையாக வெடித்தான். விஹாரத்தை நோக்கி ஓடியவன் கதவுகள் இறுக மூடியிருப்பதையும் கீழே பொத்தருட்டனின் குறுவாள் கிடப்பதையும் கண்டு கார்குழலி உள்ளே இருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டான். பணி புரியும் ஆட்களும் நிறைய உள்ளே இருக்கிறார்கள் என்பதை ஊகித்து உணர்ந்தவன் மீண்டும் பொத்தருட்டன் கிடந்த இடத்தை அடைந்தான். முன்னிரவில் தன்னோடு பேசிக் கொண்டிருந்த நண்பர் இருவரையும் பலிகொண்டு விட்ட கார்குழலி என்ன பெண்ணா அல்லது அரக்கியா என்று சபித்தான். பொத்தருட்டனது உடலைத் தூக்கியவன் மெல்ல படகிருந்த இடத்தை அடைந்தான். படகிலிருந்து ஆயுதங்களைக் கொண்டு வந்தவன் மழையை லட்சியம் செய்யாது கரையில் பள்ளம் தோண்ட ஆரம்பித்தான்.

எத்தனையோ கொலைகளைப் புரிந்த மார்க்கியனது மனம் நண்பர்கள் இருவரையும் பள்ளத்திலிட்டு மண்ணால் மூடிய போது பெரும் சோகத்தால் கனத்துக் கிடந்தது.

விஹாரத்திலிருக்கும் துறவி எப்படியும் கார்குழலியை தஞ்சைக்குத்தான் அழைத்துச் செல்வார் என ஊகித்த மார்க்கியன், தன் புரவியிலேறித் தஞ்சை செல்லும் பாதையை நோக்கி விரைந்தான்.

**கா**ர்குழலி மீண்டும் கண் விழித்த போது நன்றாக விடிந்திருந்தது. நீண்ட நேரம் தான் உறங்கி விட்டதை உணர்ந்தவள் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள். அவளிருந்த அறையை நோக்கி அந்தத் துறவி வந்து கொண்டிருந்தார்.

அவரது ராஜநடையையும், திடமான சரீரத்தையும், கைகளில் தெரிந்த வாள் வடுக்களையும் கவனித்தவள், அவர் ஒன்றும் வயதில் முதியவரல்ல என்பதையும், துறவு கொள்ளுமுன் பெரும் வீரராக இருந்திருக்க வேண்டும் என்பதையும் புரிந்து கொண்டாள்.

அவள் நீராடவும் உணவருந்தவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருப்பதை அறிவித்த துறவி, ஓரிரு பணிகளை முடித்தபின் அவளைத் தஞ்சைக்கு அழைத்துச் செல்வதாகவும் தெரிவித்தார். நீராடி, புத்தாடை புனைந்து வாசலில் வந்து நின்ற கார்குழலிக்குப் புத்துணர்வு பிறந்திருந்தது. காலை வெயிலில் பணியாளர்கள் வியர்வை வழிய கருங்கற்களை உடைத்தும், சுமந்தும், செதுக்கியும் பணியில் ஈடுபட்டிருந்தனர். நிழலில் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன.

வாயிலில் ரதமொன்று வந்து நின்றது. பின்னாலிருந்து துறவியின் குரல் ஒலித்தது. ''மகளே புறப்படச் சித்தமாயிரு. இதோ

வந்து விடுகிறேன்." உள்ளே சென்று திரும்பிய துறவியின் கரங்களில் வேலைப்பாடுடன் கூடிய பெரும் வாள் ஒன்று இருந்தது. கார்குழலியின் விழிகளில் வியப்பு மலர்ந்தது. அவள் வியப்பைக் கவனித்தவர், "பூர்வாசிரமத்தில் இது நான் பயன்படுத்தியது மகளே. உன்னைத் தஞ்சைக் கோட்டையில் கொண்டு சேர்க்கும் வரை இது உன்னைப் பாதுகாக்கும்" என்றார் முறுவலுடன்.

ரதத்தில் கார்குழலி ஏறியமர்ந்ததும் சாரதியாகத் தானே அமர்ந்தவர், அந்த வாளை ரதத்தினுள் பக்கவாட்டில் செருகினார். செடி கொடிகளும் மரங்களும் இரவு அடித்த காற்றில் வழியெங்கும் விழுந்து கிடக்க, லாகவமாக ரதத்தை ஓட்டி அவற்றைக் கடந்தவர், ராஜபாட்டையை அடைந்ததும் ரதத்தைப் பறக்க விட்டார்.

அரிசிலாற்றின் கிளைக் கால்வாயொன்றின் மீது கட்டப்பட்ட பாலத்தின் அருகே ரதம் வேகம் குறைந்து நின்றது. திரையை விலக்கி வெளியே நோக்கிய கார்குழலியின் விழிகளில் அச்சம் படர்ந்தது.

புரவியொன்று ஓரத்தில் நிற்க, பாலத்தின் குறுக்கே உருவிய வாளுடன் நின்றிருந்தான் மார்க்கியன். கார்குழலியைக் கண்ட அவன் பழுப்பு விழிகளில் கொலைவெறி மின்னியது.

"கார்குழலி, ரதத்தை விட்டு இறங்கு" என்ற உத்தரவும் பிறந்தது அவனிடமிருந்து.

திரும்பிப் பாராமலேயே கார்குழலியைக் கையமர்த்திய துறவி அமைதியாகக் கேட்டார், "நீதான் மார்க்கியன் என்பவனா?"

"என்னைத் தெரியுமா உங்களுக்கு?" - அவன் குரலில் உஷ்ணமிருந்தது.

"அந்த பாக்கியம் நேற்றிரவுதான் கிடைத்தது" - என்றார் துறவி.

"தெரிந்த வரையில் நல்லது."

"யாருக்கு நல்லது அப்பனே?"

"ஏன் உமக்குத்தான்."

"எனக்கு நல்லது செய்ய போதி சத்துவர் ஒருவர் இருக்கிறார் அப்பனே."

"நானும் உமக்கு நல்லது செய்ய முடியும்."

"நீயா? எப்படி?" - அக்கறையுடன் வினவினார் துறவி.

"உம்மைக் கொல்லாமல் விடுவது உமக்கு நல்லதில்லையா?" - என்ற மார்க்கியன் அடுத்து அவரை ஏக வசனத்தில் மிரட்டவும் செய்தான்.

"ஏய் துறவி, உயிரின் மீது ஆசையிருக்கும் பட்சத்தில் இறங்கி ஓடிப் பிழைத்துக் கொள்ளும்!"

"ஏனப்பா அந்தப் பெண்ணைத் துன்புறுத்துகிறாய்? அரசர்களின் சச்சரவுக்கு இந்தப் பெண் பலியாக வேண்டுமா?" என்றார் துறவி.

"உம்மிடம் உபதேசம் பெற நான் வரவில்லை. நீர் இப்போது ரதத்தை விட்டு ஓடப் போகிறீரா இல்லையா?" - மார்க்கியனின் முகம் இன்னும் கறுத்து பழுப்பு விழிகள் மின்னின.

"அது இப்போதைக்கு என்னால் இயலாது அப்பனே."

"அப்படியானால் நீரும் தொலைந்து போம்" - என்று இரைந்த மார்க்கியன், தன் வாளைத் துறவியின் மார்புக்கு நேரே பாய்ச்சினான்.

அலறுவதற்காக வாயைத் திறந்த கார்குழலி, கண்ணெதிரே நிகழ்ந்த சம்பவங்

## சுண்ணாம்பு அடிப்பது எந்த வீட்டுக்கு?



வெளியூரில் தங்கியிருந்த கிருபானந்த வாரியார் ஒருநாள் காலை தம் நெற்றியில் திருநீறு அணிந்து கொண்டிருந்தார். அதைக் கவனித்த ஒரு சிறுவன் "சாமியார் நெற்றிக்குச் சுண்ணாம்பு அடிக்கிறார்போல" என்றான் தன் நண்பர்களிடம், கேலியாக!

வாரியார் அவனைக் கூப்பிட்டு, "எந்த வீட்டுக்குச் சுண்ணாம்பு அடிப்பார்கள்? குடியிருக்கும் வீட்டுக்கா? குட்டிச் சுவருக்கா?" எனக் கேட்டார்.

"குடியிருக்கும் வீட்டுக்குத்தான்!" என்றான் சிறுவன்.

"நான் என்னைக் கடவுள் குடியிருக்கும் வீடாக நினைக்கிறேன். அதனால் சுண்ணாம்பு அடிக்கிறேன். நீ உன்னை இதே மாதிரி நினைக்கிறாயா? இல்லை கழுதை குடியிருக்கும் குட்டிச்சுவராக நினைக்கிறாயா?"

ஒரு கணம் யோசித்த சிறுவன், "நான் ஏன் என்னைக் குட்டிச்சுவராக நினைக்கணும்? குடியிருக்கும் வீடாகத்தான் நினைப்பேன்" என்றான்.

"அப்படியானால் நீயும் உன் நெற்றியில் சுண்ணாம்பு அடித்துக்கொள்" என்று அவனுக்கு விபூதியைப் பூசி அனுப்பி விட்டார்.

- பொன். ராஜேந்திரன்

ஆதாரம் : வாரியாரின் அனுபவங்கள்.

களால் பிரமிப்பில் உறைந்து போனாள். கண்ணிமைக்கும் நேரத்தில் வாளின் பாதையிலிருந்து சரிந்து லாகவமாக விலகிய துறவி, கீழே குதித்து இறங்கினார். மார்க்கியனின் அடுத்த வீச்சுக்குச் சுழன்று தப்பியவர், ரதத்தின் பக்கவாட்டில் செருகியிருந்த வாளைச் சரேலென்று உருவினார்.

அடுத்து நிகழ்ந்தவற்றைப் பிற்காலத்தில் பலமுறை எண்ணிப் பார்த்தபோதெல்லாம் கார்குழலி வியந்திருக்கிறாள்.

அந்த வாள் அத்தனை துரிதமாக அவர் கையில் தோன்றுமென்றோ, அனாயாசமாக அது சுழன்று, மார்க்கியனைச் சற்று நேரம் திணறடிக்குமென்றோ எதிர்பார்த்திராத கார்குழலி மட்டுமென்ன, மார்க்கியனும் கூட திகைத்தே போனான்.

மார்க்கியனின் வாளைத் தடுத்த துறவியின் வாள், ஏதோ ஒரு புது வகையில் சுழன்று அவன் வாளைப் பல திசைகளிலும் அலைபாயச் செய்தது. மார்க்கியனது பிரமிப்பு நீங்குமுன் அவன் வாள் இரண்டு துண்டுகளாக உடைந்து, அவன் கையிலிருந்து பறந்து கீழே சலசலத்து ஓடிய கால்வாயில் சென்று விழுந்தது.

திகைப்பில் கருங்கற்சிலையாய் உறைந்து போய் நின்றிருந்தான் மார்க்கியன். போரில் வாளைத் திசை திருப்பி விடுவதோ, கையிலிருந்து பறிப்பதோ கூட சாத்தியம்தான் என்று அறிந்திருந்த அவன், சுழலும் வாளை இரண்டாக முறித்துப் பறக்க வைக்கவும் ஒரு கலை இருக்கிறதென்பதை அன்றுதான் கண்டான்.

பரம அமைதியுடன் ஒலித்தது துறவியின் குரல் : ''மார்க்கியா, போதி சத்துவரின் அருள் வழியில் சேர்ந்த பின் நான் யாரையும் கொல்வதில்லையென்று விரதம் பூண்டிருக்கிறேன். எனவே நீ பிழைத்தாய். அதோ வீரர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். என்னால் நீ சிக்கி மடிவதையும் நான் விரும்பவில்லை. உயிர் பிழைத்து ஓடி விடு.''

உண்மையில் தூரத்தில் புரவிகளில் சோழ வீரர்கள் அதிவேகமாக வருவதைக் கண்ட மார்க்கியன், சட்டென்று கால்வாய் வெள்ளத்தில் பாய்ந்தான். வீரர்கள் துறவியைக் கண்டு வணங்கி நின்றனர். வெள்ளத்தில் பாய்ந்தது மார்க்கியன் என்பதை அறிந்த வீரர்கள் கால்வாயின் ஓரமாக அவனைத் தேடிச் சென்றனர்.

ஒன்றுமே நடவாதது போல மீண்டும் வாளை ரதத்தில் செருகிய துறவி, ரதத்தைச் செலுத்த ஆரம்பித்தார். நான்கு வீரர்கள் தொடர தஞ்சையை அடைந்த ரதம் நேராகக் கோட்டைக்குள் பிரவேசித்தது. துறவியைக் கண்ட வீரர்கள் அனைவரும் தலைதாழ்த்தி வணங்கினார்கள். அரண்மனையை ரதம் நெருங்கியதும் ஸ்தானிகரும் கோட்டைத் தலைவாயிலும் காவலுக்கு நின்ற வீரர்களும் கூட ஓடி வந்தனர்.

அதே அமைதியான பார்வையுடன் கீழே இறங்கிய துறவி, ''மகளே, கீழே இறங்கு'' என்றார் கார்குழலியிடம். ஏதோ கனவிலிருந்து இறங்குவதைப் போல கீழே இறங்கியவள் அரண்மனைப் படிகளிலிறங்கிய விக்கிரமன், தங்களை நோக்கி ஓடி வருவதைக் கண்டாள்.

அளவு கடந்த மகிழ்ச்சி முகத்தில் மின்ன அவர்களை ஓட்டமும் நடையுமாக நெருங்கிய விக்கிரமன், அந்தத் துறவியை சேர்த்துத் தழுவிக் கொண்டான். கார்குழலி திகைத்தாள்.

''விக்கிரமா, இவள் நேற்றிரவு நமது விஹாரத்தில் அடைக்கலம் புகுந்தாள்'' என்றவர், சுருக்கமாக நடந்தவைகளைக் கூறினார்.

''சரி நண்பரே, வாருங்கள் உள்ளே செல்வோம்'' என்று அழைத்த விக்கிரமனைத் தடுத்த துறவி, ''வேண்டாம் விக்கிரமா, என் விரதம் உனக்குத் தெரியாதா? அரண்மனைகளுக்குள் நான் நுழைவதில்லை. போதி சத்துவர் உங்களுக்கு அருள் புரியட்டும்'' என்று விடைபெற்றுக் கொண்டு ரதத்திலேறி கோட்டையை விட்டு வெளியே செல்லும் பாதையில் ரதத்தைச் செலுத்தினார்.

ரதம் செல்வதைப் பார்த்தபடி நின்றிருந்த விக்கிரமனின் விழிகளில் ஏக்கச் சாயை பலமாகப் படர்ந்தது.

விக்கிரமனைக் கண்ட கார்குழலியின் விழிகளில் துக்கமும், வெட்கமும் ஆசையும் போட்டி போட்டு மின்னின. அதையும் மீறிய ஆவல் அவளை உந்தவே கேட்டாள், ''இளவரசே, யார் இந்தத் துறவி?'' - என்று.

விக்கிரமன் முகத்தில் பெருமிதம் படர்ந்தது. ''இவர் எனது பால்ய நண்பர். தன் தந்தை விட்ட பணியைத் தொடர, அரண்மனை வாழ்வை வெறுத்துத் துறவியாகி விட்டவர். நாகை புத்தக விஹாரத்தைத் தொடர்ந்து கட்டி முடிக்க வந்திருக்கும் இவர், கடாரத்து மன்னர் சூளாமணிவர்மரின் மகன் *ஸ்ரீமாற விஜயோத்துங்கவர்மர்'' என்றான் விக்கிரமன்.

(தொடரும்)

---

* கடாரத்து அரசன் சூளாமணிவர்மனால் தொடங்கப்பட்டு அவன் மகன் ஸ்ரீமாற விஜயோத்துங்கனால் முடிக்கப்பட்ட நாகை சூளாமணி விஹாரத்திற்கு முதற்குலோத்துங்கன் ஆயிரம் கலம் விளையக்கூடிய நூறு வேலி நிலமும் தினப்படி பத்து மணங்கு எண்ணெயும் இன்னும் பலவும் நிபந்தங்களாக விட்டுள்ளான்.

- லெய்டன் செப்பேடுகள்.

## எங்கிருந்து வந்தது

# இவ்வளவு துணிச்சல்!...

நான் ஒரு இன்ஷூரன்ஸ் கம்பெனியில் ஏஜெண்டாகப் பணியாற்றி வருகிறேன்.

நான் சந்திக்கும் நபர்கள் பலர் என்னிடம் ஆங்கிலத்தில் பேசுவார்கள்.



அவர்கள் பேசுவதை ஓரளவு புரிந்து கொண்டாலும், அவர்களிடம் ஆங்கிலத்தில் பேச எனக்கு மிகவும் பயமாக இருக்கும்.

இதனால் இன்ஷூரன்ஸ் திட்டத்தின் நன்மைகளை ஆங்கிலத்தில் விரிவாக எடுத்துரைக்க முடியாமல் திண்டாடினேன்.

"இந்த வேலை உனக்கு ஒத்து வராதுன்னு அப்பவே சொன்னேன் கேட்டியா?" என்று என் வீட்டிலுள்ளோர் முணுமுணுக்கத் துவங்கினார்கள்.

வேலையை விட்டுவிடலாமா என்று யோசித்துக் கொண்டிருந்த போது, என்னுடன் பணியாற்றும் என் தோழி நிர்மலா விவேகானந்தா கல்வி நிலையத்தின் தபால் முறை ஆங்கிலப் பயிற்சி பற்றி கூறினாள்.

அவளது ஆலோசனைப்படி நான் இப்பயிற்சியில் சேர்ந்தேன்.

பயிற்சி முறை மிகவும் எளிமையாக இருந்ததால், மாதா மாதம் அவர்கள் அனுப்பிய பாடங்களை ஆர்வமுடன் படித்து மூன்றே மாதங்களில் ஆங்கில இலக்கணத்தை முழுமையாகக் கற்றுக் கொண்டேன்.

அடுத்த மூன்று மாதங்களில் ஸ்போக்கன் இங்கிலீஷ் பயிற்சி பெற்றேன்.

இப்பயிற்சியை முடித்த என்னால் இப்பொழுது மிகச் சரளமாக ஆங்கிலத்தில் பேச முடிகிறது. இதனால், நான் ஈடுபட்டுள்ள பணியில் சிறப்பாகப் பணியாற்ற முடிகிறது.

ஆங்கிலத்தில் பேசினால் தவறாகப் பேசிவிடுவோமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டிருந்த நானா இவ்வளவு துணிச்சலாக பேசுகிறேன் என்று எனக்கே வியப்பாக இருக்கிறது.

எஸ். ஜான்சி

வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில், தபால் மூலம் இப்பயிற்சியினை நீங்களும் மேற்கொள்ளலாம்.

'நேர்முகப் பயிற்சியும் உண்டு'

பெண்களுக்கு தனி வகுப்புகள்.

ஒரு போஸ்ட் கார்டில் உங்களது முகவரியைத் தெளிவாக எழுதி கீழ்க்காணும் முகவரிக்கு இன்றே அனுப்பி வையுங்கள். பயிற்சிபற்றிய விபரங்களை உங்களுக்கு உடனே அனுப்பி வைக்கின்றோம்.



**விவேகானந்தா கல்வி நிலையம்**

9, நடேசன் தெரு, தி.நகர்,
சென்னை-600 017.

Thooriga 219/F38

# குடை

மருந்துக் கடையில் அமிர்தாஞ்சன் வாங்கிக் கொண்டு திரும்பி, பத்தடி நடந்திருக்க மாட்டேன். கடைக்காரன், ''சார் உங்க குடை'' என்று கூவினான். எப்பொழுதோ யாரோ தவற விட்டுச் சென்ற குடையை, அப்போது கவனிக்காத கடைக்காரன், இப்போது அது என்னுடையது என்று நினைத்துக் கூப்பிட்டிருக்கிறான் போலும். 'அது நம்மளுது இல்லப்பா!' என்று சொல்ல மனம் வரவில்லை. குடையை வைத்தவன் திரும்பி வருவான் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. குடையை மறந்தவனுக்கு, வைத்த இடம் மட்டும் நினைவிருக்கப் போகிறதா என்ன... குடை என்னுடையது இல்லை என்றால் கடைக்காரனே சுருட்டிக் கொள்வான்...

''ரொம்ப தேங்க்ஸ்ப்பா...'' குடையை வாங்கிக் கொண்டு படியிறங்கினேன். அது நல்ல ஃபாரின் குடை. மடக்குக் குடை வேறு. அதை இதுவரை நான் உபயோகித்திராததால், அது என்னை மிகவும் பரவசப்படுத்தியது. ஒரு பொக்கிஷம் கிடைத்து விட்ட மாதிரி மனது கெக்கலித்தது.

தலையெல்லாம் சுத்தமாய் நரைத்துப் போன மனிதர் ஒருவர் அவசரமாய்க் கடைக்காரனிடம் சென்று, ''யப்பா இங்கே ஒரு குடையை வச்சிட்டுப் போயிட்டேன் பார்த்தீங்களா...'' என்றார். இதைக் கேட்ட எனக்குத் திருடனுக்குத் தேள் கொட்டியது போல ஆகி விட்டது.

''என்ன சார் இது... நாங்க வியாபாரம் பண்றதா, இல்ல யார் யார் குடையை மறந்து வச்சிட்டுப் போறாங்கன்னு பார்த்து, அவங்களுக்கு ஞாபகம் ஊட்டறதா? தோ... சார் கூட மறந்து வச்சிட்டுப் போயிட்டார். கடையில கூட்டமில்லாததால பார்த்தேன். கூப்பிட்டுக் கொடுத்தேன். ஆமாம், நீங்க வந்திட்டுப் போயி எவ்வளவு நேரமிருக்கும்?''

''ஒரு மணி நேரமிருக்கும்ப்பா...'' என்று சொல்லியபடி பெரியவர் நேரே என் கையிலிருந்த குடையைப் பார்த்ததும் குலை நடுக்கம் கண்டேன். அய்யா என்னை மன்னிச்சிடுங்க. தவறுதலா என்னோட குடைன்னு எடுத்துக்கிட்டுப் போயிட்டேன்... என்று ஏதாவது பொய் சொல்லி சமாளிக்கத் தெரியாமல் நெளிந்தேன்.

''அதெல்லாம் கிடைக்காது சார். அசந்தா ஆளையே தட்டிக்கிட்டுப் போற இந்த காலத்திலே இதெல்லாம் எங்க கிடைக்கப் போறது...'' கடைக்காரனின் நம்பிக்கையில்லாத செய்தியைக் கேட்ட பெரியவர் முகம் தொய்ந்து போய், என் அருகே வந்தார். இப்போதும் அவரின் பார்வை என் கையிலிருந்த குடையிலிருந்த தால் வயிற்றில் புளி கரைக்க ஆரம்பித்தது.

இன்னும் அந்நாள் குடையை சரியாய் கவனிக்கவில்லை என்றே நினைக்கிறேன். பார்த்து விட்டால் தொலைந்தேன். நான் எங்கே போய் சொல்லியிருக்கப் போகிறேன் என்று கடைக்காரன் நம்பியிருக்கலாம். ஆனால் குடைக்குச் சொந்தக்காரனுக்குமா அடையாளம் தெரியாமல் போய் விடும்?

''அடப்பாவி இதுதான்டா என் குடை. ஏன்டா இது மாதிரி வெள்ளையும் சொள்ளையுமா இருந்துக்கிட்டு கயவாளித்தனம் பண்றீங்க'' - இவ்வாறு பேசி மானத்தை வாங்கப் போவதாய் நானே ஊகம் பண்ணிக் கொண்டு பயப்பட ஆரம்பித்தேன். அடுத்தவன் சொத்துக்கு ஆசைப்பட்டால் இதுதான் கதி. சக்கையா மாட்டப் போறோம்...

பெரியவர் இப்போது எனக்குச் சரி சமமாக நடந்து கொண்டே குடையைப் பார்த்தபடி வந்தார். அவராகவே பேச ஆரம்பித்தார். அடையாளம் தெரிந்து கொள்ளாதிருக்கும் பொருட்டு, அதை எப்படியெல்லாம் இயல்பாகத் தெரிகிற மாதிரி மறைக்க முடியுமோ அப்படியெல்லாம் முயன்றேன்.

''போயிடுச்சி... நூத்தம்பது ரூவா. அருமையான குடை. வாங்கி மூணு மாசந்தான் ஆவுது. அப்படியே புத்தம் புதுசா வச்சிருந்தேன். அதை யாரையும் தொட விட மாட்டேன் தம்பி. பொண்ணுப் போல எடுத்துக்கிட்டுப் போயி, எடுத்துக்கிட்டு வருவேன். பாவி, இந்த முறை தொலைச்சிப் புட்டேன்...''

எனக்கு மென்மேலும் பயமும், குழப்பமும் அதிகரித்தது. வழியில் போகிற ஒனானைப் பிடித்துக் காதில் விட்டுக் கொண்டதாய் நினைத்து நொந்தேன். அந்த ஆள் இதுவரை குடையை அடையாளம் கண்டு கொள்ளாதது கொஞ்சம் மகிழ்ச்சியான விஷயம் என்றாலும் எந்த நேரத்திலும் அது கண்டுபிடிக்கப்படலாம் என்ற எண்ணம் ஏற்பட்டது. அதோடு, தெரிந்து கொண்டே கிழம் நடிக்கிறதா? என்று சந்தேகம் வேறு வந்தது. கொண்டு போய் நல்ல இடமாகப் பார்த்து மானத்தை வாங்க நினைக்கிறதோ? அப்படித்தானிருக்க வேண்டும். அய்யோ... அப்போது என் நிலை... தெரு சிரித்துப் போய், தலைகாட்ட முடியாமல் போகப் போகிறது. அதோடு 'குடைத் திருடன்'

பதூர் வள்ளுவன்

என்று பேர் வேறு வைக்கப் போகிறார்கள்... டே ரங்கநாதா! ஏண்டா இப்ப இந்த நிலைக்கு ஆளானே... இப்படி மோசமான நிலைக்கு என்னை ஆளாக்கின குடை மீது பயங்கர வெறுப்பு வந்தது. சூழ்நிலையை மறந்தவனாய் அந்தக் குடையைத் தூக்கிப் பார்த்தேன்.

''இதேதான் தம்பி...'' என்று பெரியவர் சொன்னதும் ஸ்தம்பித்து சகலமும் ஆட ஆரம்பிக்க, அவரை பாவமாய்ப் பார்த்தேன்.

''உங்கக் குடையைப் பார்த்தா எங் குடையைப் பார்க்க வேணாந்தம்பி. அச்சா இதைப் போலத்தான் இருக்கும்!''

அவரின் இந்த வார்த்தை என்னை சற்றே ஆசுவாசப்படுத்தியது. ஆனாலும் 'வெல வெலப்பு' அகலவில்லை. அவர் இது மாதிரி என் கூடவே வருவதும், திடீரென்று பய முறுத்துவதும் எனக்குள் கோபத்தைக் கிளறியது. ''இந்தாய்யா குடை. இது உன்னோடது தான்...'' என்று சொல்லி விட்டு ஓடி விட்டால் தேவலாம் போல் வந்தது.

வெகு நேரமாய் மிரட்டிக் கொண்டிருந்த வானம் மெல்ல தூறல் போட ஆரம்பித்தது. ''தம்பி கொஞ்சம் குடையை விரிங்களேன், எனக்கு ஆஸ்துமா...''



அந்தக் குடைக்கு நான் புதியவன் என்று தெரிந்து விடக் கூடாது என்பதற்காக லாகவமாக பட்டனை அழுத்த, குடை விரியவில்லை. தடுமாற்றத்தைச் சமாளிக்குமுன், ''கத்தி கட்டியிருக்கிற நாடாவ அவுத்து விடுங்க தம்பி'' என்று கிழம் சொல்ல, நான் நம்பவில்லை. அந்த ஆளுக்கு அடையாளம் தெரியவில்லை என்று நான் நம்பிக் கொண்டிருப்பதை நம்பவில்லை. தெரிந்து கொண்டேதான் இப்படி என்கூட நடந்து வந்து பழிவாங்குகிறது அல்லது வாங்கப் போகிறது. நான் தெய்வத்தை வேண்டிக் கொண்டேன். குடையை எடுத்தது தவறு. இனிமேல் எந்தப் பொருளையும் யார் பொருளையும் எடுக்க மாட்டேன். இது சத்தியம்...

''பார்த்தீங்களா தம்பி, நம்ம கையில ஒரு குடை இருந்ததாலதான் இப்ப மழையைக் கண்ட உடனே டக்குன்னு விரிச்சிக்கிட்டுப் போக முடியுது. என்ன மாதிரி ஒரு வியாதிஸ்தனுக்கு உதவ முடியுது. எனக்கு மழைத் தண்ணி ஒத்துக்காது. உடனே படுக்கையில போட்டுடும். அவ்வளவுதான். நான் படற கஷ்டம் எனக்குத்தான் தெரியும். ஒரு கடுதண்ணி வச்சித் தர ஆளில்ல...''

இதைக் கேட்ட நான் அவரை பரிவுடன் நோக்க, ''ஆமாந்தம்பி, நான் ஒண்டிக்கட்ட. இதுக்காகத்தான் குருவி சேர்க்கிற மாதிரி சேர்த்து அந்தக் குடையை வாங்கினேன். கட்டிமேட்டு பாய் ஒருத்தர்கிட்டதான் சொளையா நூத்தம்பது ரூவா கொடுத்து வாங்கினேன்.''

அவரின் பேச்சு என்னுள் ரம்பமாய் அறுக்க ஆரம்பித்தது. எனவே, அந்தக் குடையை உண்மையைச் சொல்லி, கொடுத்து விடலாம் என்று நினைத்தேன். ஆனால், இப்போது பதவிசாக சொந்தக் கதை சொல்லும் இந்த மனிதர் அந்த நிலையில் எப்படி 'ருத்ரதாண்டவமாடி' என் மானத்தை வாங்காமல் இருப்பார் என்பதை நிச்சயமாக என்னால் நம்ப முடியவில்லை.

குடையை அவரிடம் சேர்க்கிறேனோ இல்லையோ. ஆனால் அதை என் கையிலிருந்து விடுவித்தால்தான் எனக்கு நிம்மதி.

**ப**ஸ் ஸ்டாப் வந்து விட, தப்பித்துக் கொள்ளலாம் என்று பெருமூச்சு விட்டேன். அதற்குக் கொஞ்சமும் அர்த்தமில்லாமல் போயிற்று. அதுவும் நான் போக வேண்டிய பஸ்ஸையே எதிர்பார்த்து நின்றது. பஸ் ஏறிக் கொண்டோம். கண்டக்டர் வர தயாராய் வைத்திருந்த சில்லறை கொடுத்து, எனக்கும் சேர்த்து டிக்கெட் வாங்கி, என்னை நெத்தியடியாய் அடித்தது. ''நான் வாங்கியிருக்க மாட்டேனா'' என்று மென்மையாய்க் கடிந்து கொண்ட போது, ''அதனால என்ன தம்பி, எவன் செத்தா எனக்கென்னன்னு ஓடிக்கிட்டேயிருக்கிற இந்தக் காலத்தில வயசான இந்த மனுஷனோட கதையை எவ்வளவு கரிசனமாக் கேட்டுக்கிட்டு வர்றீங்க. உங்களை மாதிரி புள்ளைங்கள பார்க்கிறது கஷ்டம் தம்பி...

ஒரு சீட் காலியாகி இருவரும் அமர்ந்து கொண்டோம். இடைப்பட்ட ஸ்டாப்பிங் ஒன்றில் ஏறிய நண்பன் அருகே வர, குடையைப் பற்றி எதுவும் கேட்டு விட்டால் என்ன செய்வது என்று கொஞ்சமும் சம்பந்தமில்லாமல் நினைத்துப் பயந்தேன்.

ஜன்னலோரமாக உட்கார்ந்திருந்த பெரியவர் எதைப் பற்றியோ ஆழ்ந்த யோசனையுடன் வெளியே வெறிச்சென்று பார்த்துக் கொண்டிருந்தார். நான் மாட்டிக் கொண்டிருக்கும் மஹா சிக்கலிலிருந்து மீள்வதற்கு என்ன வழி என்று யோசித்தேன். அவரிடம் சொல்லாமல் கொள்ளாமல் குடையை வைத்து விட்டு, பஸ் நின்றவுடன் சட்டென இறங்கிப் போய் விட வேண்டும். பின்பு, அவரை ஒருபோதும் சந்திக்கக் கூடாது. அவரின் குடை அவருக்கே கிடைத்து விடும்.

அது போலவே பஸ் நின்றதும் இறங்கிக் கொண்டு விடுவிடுவென பஸ் நிற்கும் இடத்தை விட்டு அகன்றேன். இது மாதிரி கஷ்டகாலத்திலும் ஒரு நல்ல ஐடியா கிடைத்ததே என்று என்னை நானே மெச்சிக் கொண்டேன். ஆனால், எனக்கு இதிலிருந்து விடுதலை இல்லை போலும். புறப்பட்டுப் போன பஸ், கண்டக்டரின் திடீர் விசிலில் நின்றது. படியில் நின்றபடி கண்டக்டர் கத்தினார்.

''யோவ்... இந்தாய்யா உங்குடை. நீ குடையை மறந்து வச்சிட்டுப் போயிட்டே. குடை அந்த தம்பியோடது... குடுத்திடணும்னு சொல்லிக்கிட்டு ஓடற வண்டியிலேர்ந்து அந்த கிழம் இறங்கப் போக... பெரிய ரோதனையாப் போச்சய்யா உங்களோட....''

அருகே சென்று குடையை வாங்கி அதை ஒரு செத்த எலியைப் பார்ப்பது போல் பார்த்தேன்.

''தம்பி குடையை பத்திரமா எடுத்துக்கிட்டுப் போங்க. கையிலேயே வச்சிக்குங்க. இல்லாட்டி நான் விட்ட மாதிரி விட்டுட வேண்டியதுதான்.''

**ஆ**ற்றுப் பாலத்தைக் கடக்கும் போது சுற்று முற்றும் பார்த்தவண்ணம் கையிலிருந்த குடையை ஒருவித அருவருப்புடன் ஆற்றில் கடாசினேன். அந்தக் குடை கையை விட்டு அகன்று விட்டால் நிம்மதி வரும் என்று நினைத்து, திரும்பிப் பாராமல் நடந்தேன். ஆனால் கைப்பாரம் மட்டும்தான் குறைந்தது.

பின்லாந்தில் வசிக்கும் ஓர் இனத்தவர் கல்யாணப் பரிசு கொடுத்தே ஆக வேண்டும். கல்யாணத்திற்கு வந்தவர்களின் கழுத்தைக் கட்டிக் கொண்டு மணப்பெண் அழத் தொடங்கி விடுவாள். அவர்கள் பரிசு கொடுக்கும் வரையில் அழுகையை நிறுத்த மாட்டாள்!
ஆதாரம் : நாடோடியின் ஒரு நூல்; தகவல் : எம். சந்திரசேகர்

# இலவசம்!

ஒவ்வொரு
**லிவ்பெட்**
பாட்டிலுடனும்
ஒரு **சிக்**
ஜாஸ்மின்
ஷாம்பூ சாஷே
இலவசம்






# லிவ்பெட்
## பாட்டில்கள்

Shree



**Livia Polymer Bottles Pvt. Ltd.,**
Mandaiyur Salai, Mandaiyur, Pudukkottai Dt. Tamil Nadu - 622 515. Ph: 04339 - 418/472

இந்த சலுகை இல்லாமலும் லிவ்பெட் பாட்டில் கிடைக்கும்.

31.7.1993 வரை உள்ள இச்சலுகை. தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரியில் மட்டுமே.

# பொய்க்கால் குதிரைகள்

மதுமிதா

**வா**சலில் கார் சப்தம் கேட்டது.

விஸ்வநாதன் கையிலிருந்த பிரஷ்ஷைக் கீழே வைத்தான்.

ரமணி வேகமாய் வந்தான்.

''தோழரே... திருநாவுக்கரசு வந்தார்...!''

திருநாவுக்கரசு அரசியல் புள்ளி.

எழுந்தான்.

ஆர்ப்பாட்டமாய்க் கைகுலுக்கினார்.

''நீங்கதானே விஸ்வநாதன்...!''

தலையசைத்தான்.

இவனுடன் தரையில் உட்கார்ந்தார்.

இவனுக்குச் சற்று கூச்சமாயிருந்தது.

திருநாவுக்கரசு சுற்றுப்புறம் அலசினார்.

எதிரில் வைக்கப்பட்டிருந்த தட்டியில் இருந்த கோஷங்களைப் படித்தார்.

''கை குடுங்க... நல்லா வந்துருக்கு தோழரே...!''

இவன் சிரித்தான்.

''என்னடா இது... தோழரேன்னு நம்ப பாஷைல பேசறானேன்னு பாக்குறீங்களா... தோழராங்கிறது பொதுவான வார்த்தைதானே...!''

''ஆமாம்.''

திருநாவுக்கரசு பேச ஆரம்பித்தார்.

''உங்களோட தொடர் போராட்டத்தைக் கட்சி தீவிரமா கவனிச்சிட்டு வருது... உங்க கம்பெனில எத்தனை பேர் இருக்கீங்க...?''

''அறுநூறு பேர் இருக்கோம்...!''

''அப்ப குறைச்சலா அறுநூறு குடும்பம் இப்ப நடுரோட்ல நிக்குது... கயவாளிப் பசங்க... லாபத்தைச் சுளையா முழுங்கிட்டறது... ஆ...ஊன்னா... லாக் அவுட் பண்ணிடறது.''

விஸ்வநாதன் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''கம்பெனி மூடி எவ்வளவு நாள் ஆகுது?''

''அடுத்த வாரம் வந்தா நாலு மாசம் முடியுது.''

''அப்ப எல்லாரும் சாப்பாட்டுக்கு என்ன பண்றீங்க?''

''கஷ்ட ஜீவனம்தான்... என்ன பண்றது? கடன் வாங்கி ஓட்டிட்டு இருக்கோம்...!''

''தலைவருக்குப் புரிஞ்சிருக்கு... அதான் என்ன இங்க அனுப்பியிருக்கார்...!''

விஸ்வநாதன் அதிர்ந்தான்.

தலைவர் எனப்பட்டவர் முன்னாள் முதல்வர். இந்நாள் எதிர்க்கட்சித் தலைவர்.

''என்ன, தலைவரா...?''

''ஆமாம்... உங்க நல்ல நேரம் அவரு கருணை உங்க மேலே விழுந்திருக்கு...!''

விஸ்வநாதன் முகம் களித்தான்.

''தலைவர் உங்களோட பேச விரும்பறார்...!''

''எதுக்கு...?''

''எல்லாம் உங்க நல்லதுக்குத்தான் தோழரே...!''

''ம்... சொல்லுங்க.''

''நானே சொல்லிடறேன்... உங்க யூனியனுக்கு நம்ப கட்சி பேரை வச்சிடுங்க... உடனே பலன் கிடைக்கும்...!''

''அது எப்படி சார்?''

''அவசரப்படாதீங்க... இப்ப நடக்குறது பேய் அரசாங்கம்... தனித்து நின்னு போராட முடியாது... அதான் நாங்க உதவலாம்னு நினைக்கிறோம்...!''

''வேண்டாம் சார்.''

''ஏன்...?''

''எங்களுக்கு அரசியல் வேண்டாம்

சார்... நாங்க அரசாங்கத்தை எதிர்த்துப் போராடலை.. எங்க மேனேஜ்மெண்ட் டைத்தான் எதிர்க்கிறோம்...!''

''புரியாம பேசாதீங்க தோழரே... நாலு மாசம் ஆச்சே... மேனேஜ்மெண்ட் கண்டுக் கலை... அப்ப யார் உதவி பண்ணணும்...? அரசாங்கம்தானே... என்ன நடவடிக்கை எடுத்தது...!''

விஸ்வநாதன் கலபமாய்ப் புரிந்து கொண்டான்.

இது அரசியல் தந்திரம்.

குழம்பிய குட்டையில் தூண்டில் வீசும் அயோக்கிய சித்தாந்தம்.

''தயவுசெய்து விட்டுடுங்க சார்... எங்களை அரசியல்ல இழுத்து விடாதீங்க... எங்க ஒற்றுமையால நாங்க சாதிப்போம்...!''

திருநாவுக்கரசு முகம் மாறினார்.

''இதுதான் உன்னோட முடிவாய்யா...?''

விஸ்வநாதன் எழுந்து கைகூப்பினான்.

டயர் தேய பிரேக் அடித்து, அந்த போலீஸ் ஜீப் யூனியன் ஆபீஸ் முன் நின்றது.

தட்டிகள் மிதிக்கப் பட்டன.

விஸ்வநாதன் குழப்பமாய்ப் பார்த்தான்.

எஸ்.ஐ. முரட்டுத்தவமாய்த் தென்பட்டார்.

''யாருய்யா... விஸ்வநாதன்?''

இவன் முன்னால் போனான்.

''நீதானா... வா... என்னோட ஸ்டேஷனுக்கு...!''

ரங்கநாதன் எதிர்க்கேள்வி கேட்டான்.

''எதுக்கு... அரெஸ்ட் பண்ணப் போறீங்களா... வாரண்ட் இருக்கா...?''

எஸ்.ஐ. சட்டென ரங்கநாதன் கன்னத்தில் அறைந்தார்.

''என்ன சினிமான்னு நெனைச்சுக்கிட்டியா... வாரண்ட் கேக்குறியா...?''

''இன்ஸ்பெக்டர்... இது சரியில்லே...!''

விஸ்வநாதன் கத்தினான்.

எஸ்.ஐ. சிரித்தார்.

''சரிதான்... வாய்யா...!''

இவனை நெட்டித் தள்ளினார்.

விஸ்வநாதன் கோபாலிடம் சொன்னான்.

''நா போறேன்... நம்ப லாயரை அழைச்சிட்டு வா...!''

''அவரு ஊருக்குப் போயிருக்காரே...?''



''சரி. நா முன்னால போறேன்... பின்னாலே வாங்க...!''

போலீஸ் ஜீப்பில் ஏற்றப்பட்டான்.

ரங்கநாதன் இன்னும் கன்னத்தை விட்டுக் கையை எடுக்கவில்லை.

போலீஸ் ஸ்டேஷனில் கூட்டமிருந்தது.

இவனைத் தரையில் உட்காரச் சொன்னார்கள்.

''சார்... நான் என்ன தப்புப் பண்ணினேன்?''



"நீங்க எழுதின கதையை படிச்சேன். வெரி நைஸ்!"

"அப்படியா, தாங்ஸ்!"

"அரைச்ச மாவையே அரைச்சிருக்கீங்களே, அதைச் சொல்றேன்!"

- எஸ். முகம்மது யூசுப்.

---

பளிச்சென அறை விழுந்தது.

வாய்க்குள் உப்புக் கரித்தது.

யாரோ இவன் தோளை உலுக்கினார்கள்.

திரும்பினான்.

திருநாவுக்கரசு.

தோளில் கையை வைத்தார்.

''பயப்படாதீங்க தோழரே...!''

எஸ்.ஐயிடம் போனார்.

''யோவ்... எதுக்குய்யா இவரைப் பிடிச்சு வச்சிருக்கீங்க...?''

''அவரு கம்பெனி ஓனர் புகார் கொடுத்துருக்காரு... அவரு கம்பெனியைத் தீ வைக்க இவங்க திட்டம் போடுறாங்களாம்....!''

திருநாவுக்கரசு நக்கலாய்ச் சிரித்தார்.

''நான் இப்ப புகார் கொடுக்கறேன்... அந்தாளு என்னைக் கொல்ல வந்தான்னு... கம்பெனி ஓனரை இங்க கொண்டார முடியுமா...?''

எஸ்.ஐ. முறைத்தார்.

''பணக்காரனுக்கு ஒரு சட்டம்... ஏழைக்கு ஒரு சட்டமா... இது நம்ப ஆளு... விட்டுடு...!''

திருநாவுக்கரசு அதட்டியே பேசினார்.

கடைசியில் எஸ்.ஐ. ஒத்துக் கொண்டார்.

வெளியே வந்தார்கள்.

''ஒரு நிமிஷம் தோழரே... கார்ல உக்காருங்க... அவன நல்லா மிரட்டிட்டு வர்றேன்...!''

திருநாவுக்கரசு உள்ளே போனார்.

எஸ்.ஐ. சிரித்தார். கண் சிமிட்டினார்.

''எல்லாம் சரியா...?''

''சரிய்யா...! நன்றி துரை.''

''நீங்க எதுக்குய்யா நன்றி சொல்றீங்க... இந்த வேலை தலைவர் போட்ட பிச்சை... தலைவர்ட்ட என்னப் பத்திச் சொல்லுங்க... நான் போட்ட போடுல யூனியன் ஆள் மிரண்டுட்டான்... இப்ப நீங்க எது சொன்னாலும் கேப்பான்...!''

திருநாவுக்கரசு தலையசைத்து வெளியே வந்தார்.

விஸ்வநாதன் நகம் கடித்து நின்று கொண்டிருந்தான்.

''எங்க போகணும் தோழரே... யூனியன் ஆபீஸ்ல இறக்கி விடவா...?''

''வேண்டாம்.. நானும் உங்களோட வர்றேன்...!''

''எங்கே?''

''தலைவரைப் பார்க்க...!''

திருநாவுக்கரசு சிரித்தார்.

## நாக்-அவுட்



தேசிய அளவில் குத்துச் சண்டைப் போட்டிகளில் பலரை நாக்-அவுட் ஆக்கிய ஒரு வீரன், சமூகத்தால் நாக்-அவுட் ஆக்கப்படுவது கதை. ரெண்டே ரீல். இருபதே நிமிஷம்.

குத்துச் சண்டை என்பது வெறும் டைட்டில் சௌகரியத்துக்காக. லெனின் சொல்லியிருக்கிற விஷயம் எதேச்சையாகக் கிடைத்த அநாதைப் பிணத்தை வைத்துக் காசு பண்ணும் சாமர்த்தியம், அதில் தண்ணி போட்டுப் புரளுகிற 'மானுடம்', கடனே என்று சுடுகாடு வரை கொண்டு சேர்க்கிற நிக்குணூண்டு ஈர நெஞ்சம் - ஒவ்வொன்றும் முத்து கோக்கும் லாகவம்.

மேக்அப், காஸ்ட்யூம், ம்யூஸிக், ஸ்டார் வேல்யூ எதும் இல்லை. இந்த இருபது நிமிஷப் படம் தருகிற பாதிப்பு வித்தியாசமானது. வேறெந்தப் படமும் தர முடியாத ஒன்று.

- ஆர்.பி.ஆர்.

# பிரதமர் ராஜினாமா: காலத்தின் கட்டாயந்தானா?

## வட்டமேஜை

◆ காங்கிரஸ் கட்சியின் வீழ்ச்சியைக் கட்டுப்படுத்தவும், நம் நாட்டின் கௌரவம் நிலைநாட்டப்படவும் பிரதமரின் ராஜினாமா அவசியம் தேவை என்பதைப் 'பிரதமர் ராஜினாமா : காலத்தின் கட்டாயம்' தலையங்கம் தெளிவாக எடுத்துரைத்தது.
திருமருகல், மணியன்.

◆ நாட்டின் பிரதமர் சந்தேகங்களுக்கு அப்பாற்பட்டவராக இருக்க வேண்டும் என்பது முக்கியந்தான். அதற்காக ஒரு முதல்தர மோசடி மன்னனின் குற்றச்சாட்டுக்காக ராஜினாமா செய்ய வேண்டும் என்பது காலத்தின் கட்டாயமா?
சேலம் - 7, எஸ். செல்வ அரசி.

◆ ஹர்ஷத் மேத்தாவின் குற்றச்சாட்டைக் கணக்கிற்கொண்டு பிரதமர் பதவி விலக வேண்டும் என்பது காலத்தின் கட்டாயம் என்றால், வேண்டாதவர் மீது பழிசுமத்துவது என்பது வாடிக்கையாகி, ராஜினாமா செய்வதும் அன்றாட அலுவலில் ஒன்றாகப் போய் விடும். தார்மீகம் செத்துப் போய் விடும். பழி துடைக்கப்பட வேண்டியதற்கு நீண்ட கால அவகாசம் தரக் கூடாது; நாடாளுமன்றக் கமிட்டி அறிக்கை சாதாரண மக்களுக்குப் புரியும்படி சடுதியில் வேண்டும் என்று சொல்லுங்கள். அதுதான் சரி.
தக்கலை, மீரா இராம்.

◆ தலையங்கம் ஆணித்தரமாகவும் நியாய உணர்வோடும் அமைந்துள்ளது. இதற்கு ஏற்றாற்போல் காஞ்சி மஹாசுவாமிகள் அருளுரையில், பொது வாழ்வில் ஈடுபடுவோருக்குப் படிப்பு, வயது, காரியத் திறமை, நடத்தை அனைத்தும் இருந்தாலும், "ஆத்மசுத்தம்" வேண்டுமென்பதை வலியுறுத்தும் சோழர் கால சாஸனத்தை குறிப்பிட்டு, "ஐந்துக்கு இரண்டு பழுதில்லை என்பார்கள் ஆனால் சைபருக்கு அல்லவோ சரிந்து விட்டது என எடுத்துக் கூறி இருப்பது இன்றைய நிலைக்கு எவ்வளவு நிதர்சனமாக இருக்கிறது என உணர்ந்து, மஹானின் பாத கமலங்களை மனம் நமஸ்கரிக்கின்றது.
தஞ்சாவூர் - 4, துரை. நடராஜன்.

◆ சைக்கிள் போன்ற ஒரு ஜடப்பொருள் கூட மனித வாழ்வில் எவ்வாறு ஒட்டி உறவாடி பாச பந்தத்தை வளர்த்துக் கொண்டு உன்னதம் பெறுகிறது என்பதை 'அடையாளம்' சிறுகதை யதார்த்தம் இழையோட அருமையாய் உணர்த்தி விட்டது.
ஸ்ரீரங்கம், ஆர். கோபாலன்.

◆ பரிசளிப்பு விழாவில், கேடயங்களைப் பார்க்கிறோம், அதன் அழகை ரசிக்கிறோம். ஆனால் இவ்வளவு அழகான கேடயத்தைச் செய்தது யார் என்று யோசிக்கவே இல்லை. கேடயக் கலைஞர் பற்றியும், செய்யும் முறை பற்றியும் விளக்கமாக அறிய வைத்தமைக்கு நன்றி.
கோவை - 9, இ. கவுசல்யா.

◆ 'சேவாலயா' பணி பற்றிப் படித்த போது, என்னை மீறிய இயலாமை உணர்வு என்னை வெட்கப்படுத்தியது. நானும் ஏன் இது போல் முடியாதவர்களுக்கு, ஊனமுற்றவர்களுக்கு உதவக் கூடாது என்ற எண்ணம் என்னை அரிக்கத் தொடங்கியது. சேவாலயாவில் பணிபுரியும் ஒவ்வொருவருக்கும் என் பாராட்டு அடங்கிய வாழ்த்துக்கள்!
மொரட்டுப்பாளையம், இராஜேஸ்வரன்.

◆ "ஏரிகளைக் கொன்று மனிதன் வாழ முடியுமா?" போன்ற பயனுள்ள கட்டுரையை வெளியிட்டமைக்குப் பாராட்டு. ஏரிகளால் ஏற்படும் நன்மைகளை இதுவரை எந்த பத்திரிகையும் இவ்வளவு விளக்கமாகச் சொல்லவில்லை; சொல்லப் போவதுமில்லை. கல்கிக்கு நிகர் கல்கிதான்.
புதுவை - 3, ஷீலா பாஸ்கரன்.

◆ "துன்பத்தைக் கண்டு துவண்டு போகக் கூடாது; வாழ்க்கையில் எதிர்நீச்சல் போடத் தயாராக இருக்க வேண்டும்; கோழைத்தனமாகத் தற்கொலைக்கு முயற்சி செய்வது முட்டாள்தனம் என்ற கருத்தை இக்கால இளைஞர்களின் உள்ளங்களுக்கு எடுத்துரைப்பதாக அமைந்திருந்தது. "எல்லாம் நன்மைக்கே" சிறுகதை. ஆசிரியருக்கு எனது பாராட்டுக்கள்.
வயலோகம், எஸ். குருசேகர்.

◆ "தொடர்ந்து நடந்து கொண்டிருக்கும் ரயில் விபத்து கலாசாரத்திலிருந்து விடுபடுவது எப்போது?" எனும் கேள்வியுடன் அருமையான தகவல்களைத் தந்து, சில உண்மைகளையும் தெரியப்படுத்திய விதம் மிகவும் பாராட்டுக்குரியது.
கள்ளக்குறிச்சி, எம். இரவீந்திரன்.

◆ சமீப காலமாக ரயில் விபத்துக்கள் ரயில்வே துறையின் கவனக்குறைவாலும், சில சதி வேலைகளாலும் நடைபெறுவது அதிகரித்து வருவது வேதனையான அம்சம்!
வலங்கைமான், நஸீர்.

◆ 'லடாக்கி'களை இதுவரை நேரில் கூடப் பார்த்ததில்லை என்றாலும் 'இமயத் தொடரில் ஒரு கனவுப் பிரதேசம்' படித்து முடிக்கும் வரை அவர்களுடன் வாழ்ந்த ஓர் உணர்வு ஏற்பட்டதை மறுக்க முடியாது!
சிதம்பரம், சிவ. கலாதரன்.

◆ '93 லிம்கா புக் ஆஃப் ரிகார்ட்'ஸில் முதல் இதழ் சேர்க்கும் Hobby க்காக என் பெயர் இடம் பெற்றதை அறிந்தேன். இந்த Hobby யை 'பாலம்' பகுதியில் கல்கி வெளியிட்டது இந்தத் தகுதியைப் பெற எனக்கு உதவியது என்பதை நன்றியுடன் நினைவுகூர்கிறேன். இதுவரை 530 முதல் இதழ்கள் சேர்த்துள்ளேன்.
பம்பாய் - 17, எம். சுகுமார்.

மனுவை பி. ஏ விடம் கொடுத்துவிட்டு, எதிரே நின்ற கூட்டத்தைப் பார்த்து வணங்கினார் அமைச்சர்.

சைரன் ஒலித்துக் கொண்டு, வேகமாக வந்து நின்ற காரில் அமைச்சர் ஏற முயன்ற போது, கூட்டத்திலிருந்த ராமையயா, போலீஸ் வளையத்தை உடைத்துக் கொண்டு முன்னே வந்தார்.

"ஐயா...." என்றார் சத்தமாக.

காரில் ஏற முயன்ற அமைச்சர் திடுக்கிட்டுத் திரும்ப, சுதாரித்துக் கொண்ட போலீஸ் அதிகாரிகள், ராமையயாவைப் பிடித்துத் தள்ளினர். அதைக் கண்ட கூட்டம் உணர்ச்சிவசப்பட்டு அமைச்சரை நோக்கி முன்னேற, "விடுங்க அவரை" என்றார் அமைச்சர் தர்மசங்கடத்தைத் தவிர்க்கும் நோக்கில்.

ராமையயா அமைச்சருக்கு முன்னால் வந்தார்.

கும்பிட்டு விட்டுப் படபடப்பாகப் பேசினார்.

"நாங்களும் மனு கொடுத்துக்கிட்டுத்தாங்க இருக்கோம். ஒரு நடவடிக்கையும் இல்லீங்க. உங்களுக்கே பல தடவை மனு அனுப்பிட்டோம். எங்க ஊருலேந்து டவுன் பன்னிரண்டு கிலோமீட்டருங்க. எங்க ஊர்ல கிட்டத்தட்ட ரெண்டாயிரம் பேர் இருக்கோம். பள்ளிக்கூடம் போறதுக்கு மட்டும் கிட்டத்தட்ட நூறு புள்ளைங்களுக்கு மேல தினமும் டவுனுக்கு வர்றாங்க. ஒரே ஒரு பஸ்..... அதுவும் பிரைவேட் பஸ்ஸு"தாங்க ஓடுது. ஒன்பது மணி டிரிப்புல கூட்டம் தொங்கிக்கிட்டுத்தாங்க வரும். வழியில பள்ளிக்கூடம் போற புள்ளைங்க ஏறவே முடியாதுங்க. ஆம்புளப்புள்ளைங்க சைக்கிள்ல வந்துடும். பொம்பளப்புள்ளைங்க என்ன பண்ணும்....?

"அரசாங்க விதிப்படி ஒரு நாள் கலெக்ஷன் ரெண்டாயிரத்த தாண்டினா அந்த ஊருக்கு இன்னொரு பஸ் விடலாம்னு இருக்கு.... ஒரு நாள் கலெக்ஷன் மூவாயிரம் ஆகுதுங்க. ஆனா எங்க ஊருக்கு ஒரு பஸ்லே இல்லைங்க. தாலுக்கா ஆபீஸ் முன்னாடி போராட்டம் நடத்தினா, ரெண்டு நாள் பஸ் வரும். மூணாவது நாள் மழை பேஞ்சா வராதுங்க. ரோடு மோசமா இருக்குன்னு டிரைவருங்க இந்த ரூட்டுல வர பயப்படறாங்க. அதுக்கப்புறம் பஸ் வரவே வராதுங்க... ரோடு மோசமாத்தான் இருக்கு. நாங்க என்ன செய்ய முடியும். அரசாங்கம்தான் ரோடு போடணும். எங்க ஊர்லயிருந்து பொம்பளைங்க டவுனுக்கு வர முடியலைங்க. வழியில இருக்கிற எட்டு கிராம மக்களும் படற கஷ்டம் கொஞ்சமில்லைங்க. விசேஷ நாளுன்னா நடந்தே டவுனுக்கு வர்றாங்க..."

ராமையயா மூச்சு விடாமல் பேசி முடிக்க, அமைச்சர் அவரை ஆதரவாகப் பார்த்தார்.

"இந்தத் தடவை கண்டிப்பா நான் நடவடிக்கை எடுக்கறேன். கடிய சீக்கிரம் உங்க ஊருக்கு நிரந்தரமா பஸ் விட ஏற்பாடு பண்றேன். போதுமா....?"

# இரண்டாவது



கூட்டம் மகிழ்ந்தது.

''அமைச்சர்...''

''வாழ்க!'' கூட்டம் முழங்கியது.

**கா**ர் சீராக சென்று கொண்டிருக்க, பெட்டிஷனை நிதானமாகப் படித்து முடித்தார் அமைச்சர்.

மனசுக்குள் சரசரவென்று எண்ணங்கள் ஓடின.

''ஏன்யா பெருமாளு....''

பக்கத்தில் அமர்ந்திருந்த வட்டம், ''ஐயா'' என்றது பவ்யமாய்.

''இப்ப ஓடிக்கிட்டு இருக்கிற பஸ்ஸு யாரோடதய்யா...?''

''ரத்னசாமி செட்டியாரோடதுங்க. பஸ்ஸா அது... தகரடப்பா... ஆனா கலெக்‌ஷனுக்குக் கொறைச்சல் இல்லைங்க. காசை

# பேருந்து

அள்ளிக் கொட்டறாருங்க!''

''அப்படியா... ரூட்டையும் பஸ்ஸையும் நம்மகிட்ட கொடுப்பானா அந்த ஆளு...?'' என்றார் குரலைத் தழைத்து.

பெருமாள் அமைச்சரை வியப்பாகப் பார்த்தான்.

''தெரியலங்க!'' என்றான்.

''ஆளு எப்படி....? என்ன கட்சி...?''

''நல்ல மனுஷங்க. ஊர்ல மரியாதை உள்ள ஆளுங்க. அவரு பஸ் மட்டும்தான் ஓடுது. அதுவும் என்னதான் மழை பேஞ்சாலும் புயல் அடிச்சாலும் நிறுத்தாம ஓட்டறாரா, ஊர் ஜனங்க அவர தெய்வமா மதிக்கிறாங்க. அவரு அப்பா சுதந்திரப் போராட்ட வீரருங்க. இவரு எந்தக் கட்சியும் இல்லைங்க... நாம டொனேஷன் கேட்டாலும் கொடுப்பாரு. எதிர்க்கட்சிக்காரன் கேட்டாலும் கொடுப்பாரு....''

**அ**டுத்த நாள் செட்டியார் வயலிலிருந்து வீட்டுக்குத் திரும்பியபோது, வீட்டு வாசலில் அந்த மாருதி கார் அழகாக வந்து நின்றது.

கதவைத் திறந்து கொண்டு, இரண்டு பேர் இறங்கினார்கள்.



இருவர் கையிலும் பெரிய பெரிய சூட்கேஸ்கள்.

செட்டியார் அவர்களைப் பார்த்து யோசித்து, பிடிபடாமல் குழம்பினாலும் ''வணக்கம்.. வாங்க...'' என்றார் மரியாதை கருதி.

பதிலுக்குத் தலையை ஆட்டியவர்கள், ''உள்ள போயிடலாமா?'' என்றார்கள்.

''ம்'' என்றவர் குழப்பமாக உள்ளே வந்தார்.

அமர்ந்தார்கள்.

யார் நீங்கள்? என்ன விஷயம் என்பது மாதிரி செட்டியார் அவர்களைப் பார்த்தார்.

இரண்டு பேரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். ஒருவன் நேடியாக விஷயத்துக்கு வந்தான்.

''உங்க பஸ்ஸும் ரூட்டும் வேணும். இதுல பன்னிரண்டு லட்சம் இருக்கு. ரூட்டுக்கு பத்து லட்சம், பஸ்ஸுக்கு ரெண்டு லட்சம்.''

செட்டியார் ஏகமாய்க் குழம்பினார். யார் இவர்கள்? திடீரென்று காரில் வந்து இறங்குகிறார்கள்.... பஸ் என்கிறார்கள். ரூட் என்கிறார்கள்.... பன்னிரண்டு லட்சம் என்கிறார்கள்...?

திருவாரூர் பாபு

செட்டியார் புருவம் முடிச்சிட அவர்களைப் பார்த்தார்.

அவர்கள் இருவரும் பார்த்துக் கொண்டார்கள். ஒருவன் நிதானமாய்ப் பேசினான்.

''நேரடியாப் பேசறேன்... எங்கள நம்ம மாவட்டத்து அமைச்சர் அனுப்பிச்சாருங்க. உங்க பஸ்ஸும் ரூட்டும் அவருக்கு வேணும்னு ஆசைப்படறாரு....

பணத்தைக் கையோட கொடுத்துட்டு வரச் சொன்னாருங்க. பணத்தை வாங்கிகிட்டு இதுல ஒரு கையெழுத்துப் போட்டுட்டிங்கன்னா... ஆர்.டி.ஓ. நேரா இங்கயே வந்து மத்த விஷயத்தைப் பார்த்துப்பாரு'' என்றவன், சூட்கேஸைப் பிரிக்க, உள்ளே கட்டுக் கட்டாய் நூறு ரூபாய்கள். செட்டியார் அவ்வளவு பணத்தைச் சேர்த்துப் பார்த்ததில்லையாதலால் நெஞ்சை அடைத்தது.

''நான் யாருக்கும் பஸ்ஸ விக்கிறதாச் சொல்லலியே....''

''நீங்க சொல்லலதான். ஆனா அமைச்சர் ஆசைப்படறாரே...''

''அதுக்கு நான் என்னங்க பண்ண முடியும். இதுதான் எனக்கு நிரந்தர வருமானம். கிட்டத்தட்ட இருபது வருஷமா இந்த ரூட்டுல என் பஸ் ஓடுது. அத நம்பித்தான் நான் இருக்கேன். என் சொத்து, ஆஸ்தி எல்லாமே அதுதான். அதையே கொடுன்னா... எனக்குப் புரியலியே....''

''சரி... உடனே சொல்ல வேணாம். யோசிச்சிச் சொல்லுங்க.... இதுவரையும் தான் அதைப்பத்தி நினைக்கல... இப்ப நினைச்சிப் பாருங்க. ரெண்டு லட்சம் கூட பொறாத ரூட்டுக்குப் பத்து லட்சம் தர்றோம்.... அம்பதாயிரம் கூட பொறாத பஸ்ஸுக்கு ரெண்டு லட்சம் தர்றோம். நிதானமா யோசிச்சிப் பாருங்க... நாங்க அடுத்த வாரம் வர்றோம்.''

''நீங்க என்னைக்கு வந்தாலும் என் முடிவு ஒண்ணுதாங்க. நான் பஸ்ஸைக் கொடுக்கிறதா இல்லே...''

''அப்ப அமைச்சரைப் பகைச்சுக்கிறதா முடிவு பண்ணிட்டிங்க....?''

''ஐயய்ய..... பெரிய வார்த்தையெல்லாம் பேசாதிங்க. நான் எப்ப அமைச்சரைப் பகைச்சுக்கிறதாச் சொன்னேன்! நீங்க கேட்டிங்க. நான் இஷ்டம் இல்லேன்னுட்டேன். அவ்வளவுதான்! இதுல எங்க பகை வந்துச்சி...?''

''இதுதான் உங்க முடிவா...?'' ஒருவன் மிரட்டும் தொனியில் கேட்டான்.

செட்டியார் அவர்களைப் பார்த்து மென்மையாகச் சிரிக்க, வேகமாகச் சென்று காரில் ஏறிக் கொண்டு, கதவைப் 'படார் படார்' என்று அறைந்து சாத்திக் கொண்டு ஆத்திரமாய்ச் சென்றார்கள்.

''அப்படியா...?'' என்றார் அமைச்சர் ஆத்திரமாய்.

''ஆமாங்க....''

''கொஞ்ச நாள் கெடு கொடுக்க வேண்டியதுதானே....?''

''எத்தினி நாள் கழிச்சி வந்தாலும் இந்த முடிவுதான்னு சொல்லிட்டாருங்க!''

''ஓஹோ...'' அமைச்சர் தீவிரமாய் யோசித்தார்.

யோசிப்பின் இறுதியில் டெலிபோனை அவசரமாய் அணுகினார்.

அடுத்து வந்த தினங்களில் துந்தகுடி செல்லும் சாலை அவசர அவசரமாய்ச் செப்பனிடப்பட்டது.

செட்டியார் பஸ் நேரத்திற்குப் பத்து நிமிடம் முன்னதாக, புத்தம் புதிய அரசுப் பேருந்தும் பத்து நிமிடம் பின்னதாக ஒரு பேருந்தும் விடப்பட்டன.

எக்காரணத்தைக் கொண்டும் பேருந்தை நிறுத்தக் கூடாது என்றும், என்னதான் மழை பெய்தாலும் புயல் அடித்தாலும் பேருந்தைக் கண்டிப்பாய்த் தொடர்ந்து இயக்க வேண்டும் என்றும் நிர்வாக இயக்குநர் பணிக்கப்பட்டார்.

பத்து வருடம் போராடியும் கிடைக்காத பேருந்து வசதி அமைச்சரின் கோபத்தால் உடனே கிடைத்தது. அவர் கோபத்தால் முதன் முதலாக ஒரு கிராமத்திற்கு நன்மை கிடைத்தது.

பேருந்து கலெக்ஷன் சுத்தமாகக் குறைந்து விட்டாலும் செட்டியார் அதற்காக வருந்தவில்லை.



''ரேஷன் கடைக்காரர் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிட்டது முட்டாள் தனம்.''

''ஏன்?''

''எல்லா சீர்வரிசைகளிலும் கொஞ்சம் கொஞ்சம் குறையுது.''

- கே. வி.

# 44. ஜடாயு

ராஜகுமாரர்களும் சீதையும் அகஸ்தியர் சொன்ன வழியைப் பின்பற்றிப் பஞ்சவடிக்குச் சென்றார்கள்.

ஏகிஇனிது
அவ்வயின்
இருந்துறை
மின்என்றான்
மேகநிற வண்ணனும்
வணங்கி
விடைகொண்டான்
பாகனைய சொல்லியொடு
தம்பி பரிவில்பின்
போகமுனி சிந்தைதொட
ரக்கடிது போனான்.



அகஸ்திய முனிவருடைய சிந்தையானது மூவருடன் நான்காவது பிரயாணியாகச் சென்றது என்கிறார் கம்பர். அதிலும் லக்ஷ்மணனுடன் சென்றது என்று சித்திரிக்கிறார். வரப்போகும் விஷயங்கள் அறிந்த வரல்லவா முனிவர்? கவிக்குத் தெரியும் ஞானிகளுடைய சிந்தையின் போக்கைக் கண்டு சொல்ல!

போகும் வழியில் ஒரு பெரிய கழுகைக் கண்

**சக்கரவர்த்தித் திருமகன்**

டார்கள். கழுகின் அற்புத வடிவத்தைக் கண்டு இது ஒரு ராக்ஷசனாகத்தான் இருக்க வேண்டும் என்று ராமன் எண்ணி, ''நீ யார்?'' என்றான்.

அந்தக் கழுகு மிகுந்த பிரியத்துடன், ''குழந்தாய்! நான் உங்கள் தந்தையின் சிநேகிதன்'' என்றது.

பிறகு அந்தப் பெரும் பறவை தன் குலத்தை விவரித்துச் சொல்லிற்று. கருட பகவானுடைய தம்பி அருணனுடைய மகன் சம்பாதியின் தம்பி ஜடாயு என்று தெரிந்து கொண்டார்கள்.

''நீங்கள் இங்கே வனவாசத்தில் இருக்கும் போது சீதையைத் தனியாய் விட்டு விட்டு வேட்டைக்குப் போகும் காலத்தில் நான் அவளுக்குத் துணையாக இருப்பேன்'' என்றான்.

இப்படித் தங்கள் பிதா தசரதனுக்கு நெருங்கிய நண்பனான ஜடாயு சொன்னதைக் கேட்டு, அவனை ராம லக்ஷ்மணர்கள் மிகப் பிரியமாக ஆலிங்கனம் செய்து, ''காட்டில் நாம் ஒரு பெருந் துணையைப் பெற்றோம்'' என்று மகிழ்ச்சியடைந்து விடைபெற்றுக் கொண்டார்கள்.

ஜடாயுவை முதன் முதலில் பார்த்த இந்த நிகழ்ச்சியைப் பற்றி வால்மீகி சுருக்கமாக இவ்வளவுதான் சொல்லு



கிறார். பிறகு ஜடாயு சீதைக்காக ராவணனுடன் சண்டையிட்டு, காயமுற்று ராம லக்ஷ்மணர்கள் வரும் வரையில் எப்படியோ உயிரை வைத்துக் கொண்டிருந்து, விஷயத்தை அவர்களிடம் கூறி விட்டு இறந்து போனது. ராமன் ஜடாயுவின் வீரத்தையும் அன்பையும் பாராட்டிப் பிரலாபித்தது - இவற்றைப் பின்னால் வால்மீகி சொல்லுகிறார். ஜடாயுவை முதலில் ராமன் சந்தித்த இந்த நிகழ்ச்சி, வால்மீகி ராமாயணத்தில் இவ்வாறு மிகச் சுருக்கமாகச் சொல்லப் பட்டிருப்பதை ஒரு குறையாகக் கம்பர் நினைத்தார் என்று தெரிகிறது. அந்தக் குறையைத் தம் ராமாயணத்தில் கம்பர் மிக அழகாகப் பூர்த்தி செய்து, தமிழருக்குத் தந்திருக்கிறார். வால்மீகியில், அதாவது இக்காலத்தில் கிடைத்த வால்மீகி ஏடுகளில், ராஜ குமாரர்கள் ஜடாயுவைக் கண்ட படலம் நியூனமாக இருக்கிறதே என்று வருத்தப்பட்டு, தம்முடைய ராம கதையில் அதற்கு என்று ஒரு தனிப் படலம் கொடுத்துப் பாடி விட்டார். கம்பர் தம் கவிதா சக்தியைச் செலுத்தி நடந்ததைத் தெய்வீகக் கண்ணால் கண்டு பாடியிருக்கிறார். அரண்ய காண்டத்தில் இருக்கும் 1200 பாட்டுக்களில் 350 பாடல்களைத் தான் கம்பருடைய கவிதா முத்திரையிருப்பதாக டி.கே.சி. எடுத்தார்கள். இந்த ஜடாயுவைக் கண்ட படலத்திலோ 47 பாடல்களில் 37 தேர்ந்தெடுத்திருக்கிறார். தள்ளி விட்டது மிகக் குறைவு.

ஜடாயுவைப் பார்த்ததும் இவன் ஒரு அரக்கனாக இருக்கலாம் என்று சந்தேகித்து அருகில் போய்ப் பார்க்கிறார்கள். அதே சமயம் வில் ஏந்தி மரவுரி தரித்த வீரர்களை ஜடாயுவும் உற்று நோக்கிப் பார்க்கிறான். 'இவர்கள் யார், இரண்டு தேவர்களோ?' என்று அவர்கள் அழகையும் காந்தியையும் பார்த்து வியப்படைகிறான். தேவர்களை நேரில் கண்டு நன்றாகப் பழகிய ஜடாயுவே இப்படிச் சந்தேகப் படுகிறான். முடிவில் 'இவர்கள் தேவர்கள் அல்ல' என்று தீர்மானித்துக் கொள்ளுகிறான். பிறகு, 'இவன் மன்மதனேயோ!' என்று ராமனைப் பற்றி எண்ணுகிறான். பிறகு இருவர் சாயலையும் நன்றாகக் கவனித்து 'இவர்களைப் பார்த்தால் நண்பன் தசரதன் சாயலாகத் தோன்றுகிறது' என்று சந்தேகப்பட்டு, ''நீங்கள் யார்?'' என்று ராஜ குமாரர்களைக் கேட்கிறான். அவர்கள், ''நாங்கள் தசரத மகாராஜாவின் குமாரர்கள்'' என்று சொல்லுகிறார்கள். சொன்னவுடன் ஜடாயு கீழே இறங்கி அவர்களைத் தன் சிறகுகளைக் கொண்டு தழுவிக் கொண்டு, ''அரசன் சுகமா?'' என்று கேட்கிறான்.

''என்றென்றும் உலகம் மறக்காத முறையில் வாய்மையைக் காத்த தந்தை சுவர்க்கம் சென்று விட்டார்'' என்று சொல்லுகிறான்.

ஜடாயு இந்தச் செய்தியைக் கேட்டதும் துயரப் பட்டு மூர்ச்சையடைந்து, பிறகு ராம லக்ஷ்மணர்களுடைய கண்களினின்று பெருகிய நீர் அவன்மேல் பட்டு நினைவடைந்து பேசுகிறான்.

**ராஜாஜி**

''தசரதன் உடலாகவும் நான் உயிராகவும் இருந்தோம். யமன் ஏன் உயிரை விட்டு விட்டு உடலைக் கொண்டு ஏகினான்? அவன் என்னையல்லவோ கொண்டு போயிருக்க வேண்டும்'' என்றெல்லாம் சொல்லி ராஜகுமாரர்கள் ஒருவாறு மறந்திருந்த துயரத்தை மறுபடி எழுப்புகிறான். இறந்த தந்தையை மறுபடி அடைந்து விட்டதாகவே ராம லக்ஷ்மணர்கள் ஜடாயுவைத் தழுவி ஆறுதலும் சந்தோஷமும் அடைந்தார்கள். ''எங்கள் தந்தை சத்திய நெறியை விட்டுத் தவறக்கூடாது என்கிற உறுதியில் நின்று, அதனால் சகிக்க முடியாத துன்பத்தை யடைந்து உயிர் நீத்தார். எங்களைப் பெற்ற அன்னைமாரையும் ஊரையும் விட்டு நீங்கி நாங்கள் வனத்திலிருக்கிறோம். உன்னைப் பார்த்து ஆறுதல் பெற்றோம்'' என்றார்கள்.

''நீங்கள் வனவாசம் பூர்த்தி செய்யுங்கள். அது வரையில் உங்களுக்குத் துணையாக நான் இருக்கிறேன். பிறகு நானும் தசரதன் இருக்கும் உலகத்துக்குப் போவேன்'' என்றான் ஜடாயு.













பிறகு, ''தந்தை இறந்த பின் நீங்கள் அயோத்தியில் இருந்து கொண்டு நாட்டை ஆள்வதற்குப் பதில் ஏன் வனத்தில் இந்தத் தவ வேஷத்துடன் இருக்கிறீர்கள்? எந்தப் பகைவன் உங்களைக் காட்டுக்குத் துரத்தினான்? இக்ஷ்வாகு குலத்துக்கு, துரோகம் செய்த அந்தப் பகைவனை எனக்குச் சொல் லுங்கள். அவனை ஒழித்துத் தீருவேன்'' என்று கோபமாகக் கேட்கிறான்.

நடந்ததையெல்லாம் லக்ஷ்மணன் சொன்னான். ''என்னப்பனே! உனக்குச் சமானம் உலகத்தில் யார்?'' என்று ஜடாயு ராமனைத் தழுவிக் கொண் டான்.

பிறகு சீதையைப் பார்த்து, ''இந்தத் தேவி யார்?'' என்று கேட்டுத் தெரிந்து கொண்டு மகிழ்ச்சியடைகிறான். மேலே கிளம்பிப் பறந்து அகஸ்தியர் குறித்த இடத்தை ராஜகுமாரர்களுடன் கூடவே சென்று காட்டுகிறான்.

இது கம்பருடைய சித்திரம். வால் மீகி ராமாயணத்தில் நாம் காணும் விஷயத்திலிருந்தே இப்படித்தான், கம்பர் பாடியிருக்கிறபடி, நிகழ்ந்திருக் கும் என்று எண்ண வேண்டியதாகும். விட்டுப் போனதைக் கம்பர் சொல்லி விட்டார் என்றே நாம் வைத்துக் கொள்ளலாம். கம்பர் வால்மீகியை எவ் வளவு கூர்ந்து பின்பற்றிச் செல்லுகிறார் என்பதையும் கம்பர் எவ்வளவு அழகாக உணர்ச்சி பாவத்துடன் அங்கங்கே குறைகளைப் பக்தியுடன் பூர்த்தி செய் கிறார் என்பதையும் இம்மாதிரியே பல இடங்களில் நாம் காண்கிறோம். ஐயா யிரம் ஆண்டுகளுக்கு மேல் ஆகி விட்டது, வால்மீகி பாடிய ராமா யணத்துக்கு. ஏடுகளுக்கு எத்தனையோ விபத்து. விட்டுப் போனதைப் பக்தர் களும் கவிஞர்களும் தான் காண்பார் கள். குறையாக இருப்பதோடு இரண் டாம்தரம் கவிகளும் சும்மா விடுவதற்கு இஷ்டப்படாமல் சேர்த்தும் இருப் பார்கள். இதற்கெல்லாம் வருந்திப் பயனில்லை. இருப்பதையாவது எல் லாரும் படிக்க வேண்டும்.

(தொடரும்)

பல லட்சக்கணக்கான ஆங்கில ஆர்வலர்களைக் கவரக் கூடிய இலட்சிய நூல்!

**மிகச் சரியான உச்சரிப்புடன் கூடிய அருமையான நூல்**

Transliteration உண்டு Translation உண்டு. ஆம். உச்சரிப்பும் உண்டு; மொழிபெயர்ப்பும் உண்டு. பொங்குமா கடலென ஆங்கிலத்தில் நீங்கள் பூரிப்புடன் பேச வேண்டுமா? கங்கு கரையின்றிப் பெருகி வரும் காட்டாற்று வெள்ளமென ஆங்கிலத்தில் பேச வேண்டுமா? தங்கு தடையின்றி நீங்கள் ஆங்கிலத்தில் பேச வேண்டுமா? இன்றே வாங்குங்கள்.

# வர்த்தமானன் இங்கிலீஷ் ஸ்பீகிங் கோர்ஸ்

600 பக்கங்களுக்கு மேல், 70 பாடங்கள்; விலை ரூ. 55

by

Dr. சாவித்திரி M.A.(English), Ph.D., M.A.(Tamil)

சிறப்பு :

ஆங்கிலத்தில் பேசும்போது சொற்களை எப்படிச் சரியாக உச்சரிக்க வேண்டும் என்பதனை இந்த நூல் தெளிவாக விளக்குகிறது. சொற்களில் சில எழுத்துக்களை, ஒலிக்காமல் (சைலண்டாக) விட்டு விட வேண்டும்; சில எழுத்துக்களை, அழுத்தம் கொடுத்து உச்சரிக்க வேண்டும்; சில எழுத்துக்களை மென்மையாக உச்சரிக்க வேண்டும்.

ஒரு வாக்கியத்தில் உள்ள சொற்களைத் தனித்தனியாக உச்சரிக்காமல் சில சொற்களைச் சேர்த்து உச்சரிக்க வேண்டும்.

எல்லா மொழியிலும் பேசும் தன்மையும் எழுதும் முறையும் வெவ்வேறாக இருக்கின்றன என்ற போதிலும் ஆங்கிலத்தில் இந்த இரண்டுக்கும் பெரிய வேறுபாடு உண்டு. இவற்றையெல்லாம் மிகத் துல்லியமாக விளக்குகிறது இந்நூல்.

ஆங்கிலத்தில் எழுதுவதற்கும் பேசுவதற்கும் அடிப்படைத் தேவை, இலக்கணம். இந்த இலக்கணக் கூறுபாடுகள் அனைத்தையும் சிக்கலற விளக்குகிறது, எங்களது மற்றொரு நூலான **'ஆங்கிலப் பேராசான்'** (ரூ. 75)

**ஒரு சலுகை : ஜூலை மாதம் மட்டும்!**

எமது 'ஆங்கிலப் பேராசான்' வாங்குவோர்க்கு இந்நூலின் விலையில் ரூ.15 குறைத்துத் தருகிறோம். முன்னரே 'ஆங்கிலப் பேராசான்' வாங்கியவர்கள் இந்த நூல் மட்டும் தேவையானால் ரூ.40. அனுப்புக. இரண்டு புத்தகமும் தேவையானால் ரூ.115. M.O. (அ) D.D. அனுப்புக. உடனே நூல்களை அனுப்புகிறோம். தபால் செலவைத் தபால் காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறுக!

பணம் அனுப்ப வேண்டிய முகவரி

**VARTHAMANAN PATHIPPAGAM,**
ARR Complex,
141, Usman Road,
T.Nagar, Madras - 600 017.
(Near Panagal Park)
Ph. 825 7995.

நேர்முகப் பயிற்சியும் உண்டு

# ஜெ. அதிர்ஷ்டசாலிதானே?

● இரா. ரெங்கசாமி, வடுகபட்டி.

*? வன்முறைகள் சர்வசாதாரணமாகி வருகின்றனவே?*

! சாதாரண வாழ்க்கையில் மட்டுமல்ல; நல்லெண்ணத்தை வளர்க்க வேண்டிய விளையாட்டுத் துறையில் கூடப் புகுந்து கொண்டதுதான் ரொம்ப விசனிக்கத்தக்கது. எல்லைப் பாதுகாப்புப் படை அணிக்கும் தென்கிழக்கு ரயில்வே அணிக்கும் இடையே ஹாக்கி விளையாட்டு. பி.எஸ்.எஃப்பின் காப்டன் கிருஷ்ணசிங் எதிர் அணியைச் சேர்ந்தவரை (வோய்) ஹாக்கி மட்டையாலேயே விரட்டி, அடித்து, வீழ்த்தியதைப் பார்க்க ''ஸ்போர்ட்டிவ்வாக எடுத்துக் கொள்ளுவது'' என்ற சொற்றொடரே அர்த்தமற்றதாகி விட்டது!

● எம். ரமேஷ்யாதவ், திருச்சி.

*? 'வருமான வரி ஏய்ப்பவர் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும்' என்கிறாரே மன்மோகன்சிங்?*

! அரசியல்வாதிகளைத் தவிர மற்றவர்கள் மீது என்று பொருள் கொள்க.

● ஈ.ஏ. அப்துல் நஸீர், வலங்கைமான்.

*? சென்னை அருகே தொழில் பூங்கா அமையப் போகிறதாமே?*

! சென்னை நகரில் உள்ள சாதா பூங்காக்களின் நிலைமையை இந்தத் தொழில் பூங்காக்களும் அடையாமல் இருந்தால் சரி.

● க. தியாகராஜன், கொரநாட்டுக்கருப்பூர்.

*? 'காந்தியடிகள், இந்திராகாந்தி ஆகியோரைக் கொன்றவர்களுக்காக வாதாடியவர்தான் ராம் ஜெத்மலானி' என என்.டி.திவாரி சாடியுள்ளாரே?*

! அதை ஒரு குற்றமாகக் கொள்ள முடியாது. குற்றவாளி சார்பில் வாதாடுவது வழக்கறிஞரின் கடமை. குற்றவாளி என்பது நிரூபணமானால் கூட வழக்குரைஞரின் வாதத் திறமை காரணமாகத் தண்டனை குறைய வாய்ப்புண்டு.

● அ. மா. பழனிசாமி, கோவை.

*? பத்திரிகைக் காகித விலை மீண்டும் உயரப் போவது குறித்து?*

! உங்கள் கேள்வி இங்கு வந்து சேருமுன் உயர்ந்தே விட்டது! அப்புறமென்ன வாசகர்களைக் கையெடுத்துக் கும்பிட வேண்டியதுதான் பாக்கி! ஹி... ஹி...

● கே. என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

*? 'ஜெ' அதிர்ஷ்டசாலிதானே ஸார்?*

! ஹார்ஷத் உபயத்தில்!

● எம்.எல். ராஜா, கடலூர்.

*? சமீபத்தில் நீங்கள் ரசித்த கச்சேரி?*

! கச்சேரிகள்தாம் இப்போ ஒலிநாடா மூலம் வீட்டுக்கே வந்து விடுகின்றனவே. பிரஸன்னாவின் கிட்டார் புதுசாகக் கேட்டது. மாண்டலின் வாத்தியத்தில் செவிப்பறையைத் தாக்கும் தவிர்க்க முடியாத தன்மை இதில் இல்லை; கேட்கச் சுகமாக இருக்கிறது; வாசிப்பு சுத்தமாக இருக்கிறது; பாடல்கள் தேர்வில் ரசனை தெரிகிறது; ஆற்றல் புரிகிறது; எதிர்காலம் ஒளிர்கிறது.

● சா. ரமேஷ்பாபு, லால்குடி.

*? மூன்றாவது ஆண்டில் அடியெடுத்து வைத்துள்ள அ.இ.மு.க. ஆட்சி பற்றி?*

! முழுப் பக்க விளம்பரங்கள் வெளியிடுவதில் சாதனை படைத்துள்ள அரசு!

● பி. ஜெயப்பிரகாஷ், வேட்டைக்காரன் புதூர்.

*? ஐந்து கோடி ரூபாய் கடனைத் திருப்பித் தராததால் ஊட்டி பிலிம் தொழிலகத்தை மூட உத்தரவிட வேண்டும் என்று மாருதி நிறுவனம் வழக்குத் தொடர்ந்துள்ளதே? ஊட்டி பிலிம் தொழிற்சாலைக்கு ஏன் இந்த அவல நிலை?*



* Contempt பார்வை



* கறுகறுப்பு

! அரசுத் துறையில் அது இருப்பதுதான் காரணம்.

● எஸ். எம். ஜான்,
நாகர்கோயில்.

*? திரை உலகப் பிரச்னைகள் தீர்ந்து விடுமா? ஆதாயம் யாருக்கு?*

! இன்று தீர்த்து வைக்கப்பட்டது போல் தோன்றும் பிரச்னைகள் நாளை மீண்டும் வெடிக்கலாம். ஆனால் ஆறு மாத காலமாக இழுக்கடித்த பிரச்னையை நாலு மணி நேரத்தில் முடித்து வைத்து விட்டதாக இன்று ஜெக்குப் புகழாரம் கிடைத்துள்ளதுதான் ஆதாயம்.

● ஈ.டி. விஜயகுமார்,
ஈரோடு.

*? கலைஞர் சுறுசுறுப்பாக இயங்குவது பற்றி?*

! இன்று இயங்கினால்தானே நாளை இயக்கலாம்!

● பால கிருஷ்ணமூர்த்தி,
கும்பகோணம்.

*? 'ஹர்ஷத் மேத்தாவை நாடு கடத்த வேண்டும்' என்று ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் கூறியிருக்கிறாரே?*

! "ரொம்ப தாங்க்ஸ்" என்பார் மேத்தா - ஹாய்யாக அயல்நாட்டில் செட்டில் ஆகி விடுவார். காஞ்சி திக்கு நோக்கி கும்பிடுவர் அரசியல்வாதிகள். தங்கள் திவ்லு மூல்லுகள் வெளி வராது என்பதால் நிம்மதிப் பெருமூச்சு விடுவார்கள். அதிகாரிகள் "தப்பித்தோம்" என தமுட்டாகச் சிரிக்க, வங்கிகள் "பிழைத் தோம்" என திருப்தி அடைய, கோடிக் கணக்கில் நஷ்டப்பட்ட லட்சக்கணக்கான பங்குதாரர்கள் மட்டும் நாக்கை வழித்துக் கொண்டு நிற்பார்கள்.

● கே. ஆர். தேவேந்திரன்,
கொணவட்டம்.

*? ஊழல் குற்றச்சாட்டுக்காக ஜெயலலிதா ஆட்சியை டிஸ்மிஸ் செய்வது என்றால் இந்தியாவில் எந்த அரசும் மிஞ்சாது என்று குறிப்பிட்ட கல்வி ஒரு கிரிமினலின் குற்றச் சாட்டுக்காகப் பிரதமரை ராஜினாமா செய்யக் கோருவதா? இது எந்த விதத்தில் நியாயம்?*

! ஆக, மாநில அரசை டிஸ்மிஸ் செய்கிற தார்மிக பலம் மைய அரசுக்கு - பிரதமருக்கு - இல்லை என்பது நிரூபணமாகி விட்டது அல்லவா! இப்போது மத்திய அரசை யார் டிஸ்மிஸ் செய்வது சொல்லுங்கள்! ஹர்ஷத் மேத்தா கிரிமினல் என்பதால் பிரதமர் மீதான குற்றச்சாட்டு வலு விழுந்து விடாது. மாறாக, கேவலம் ஒரு கிரிமினலுக்குக் கூட இப்படி ஒரு தைரியம் எப்படி வந்தது என்ற கேள்விதான் எழும்.



● நாடு கடந்து...?



● ஹர்ஷத் உதயம்



● கூழைக் கும்பிடு



● குற்றவாளி சார்பில்...

● எம். பிரபு, குமராட்சி.

*? மெல்லவும் முடியாத முழுங்கவும் முடியாத விஷயம் எது?*

! கனில் - ஹர்ஷத் டெலிஃபோன் பேச்சு ஆடியோ, ஸூட்கேஸில் 67 லட்சம் விடியோ!

● பொ. வஜ்ரவேலு,
சென்னை - 14. ❑

*? சஞ்சய் சமாதியில் அஞ்சலி செய்ய வந்த பாரதப் பிரதமரின் புகைப் படத்தைப் பார்த்தீரா?*

! பார்த்தேன். கூழைக் கும்பிடுடன் கூடிய அவருடைய பரிதாபத் தோற்றத்தை விடவும் என் கவனத்தை அதிகம் கவர்ந்தது சோனியாவின் அருவருப்பும் அலட்சியமும் கலந்த contempt பார்வை.

**❑ ரூ 25 பரிசு பெறுபவர் :**
**பொ. வஜ்ரவேலு,**
**எஸ்.பி.க்யூ. 9, லாயிட்ஸ் எஸ்டேட்,**
**சென்னை - 600 014.**

கல்கி, ஜூலை 1, 10, 1943 இதழ்கள்

# எத்தனை அடி வேண்டும்?

"தமிழ்மகன்"

தமிழ் மக்களுக்கு எத்தனை அடி வேண்டும்? பதினோராயிரம் அடி போதுமா? அல்லது பதினாலாயிரம் அடி கொடுத்துத்தான் ஆக வேண்டுமா? - இந்தப் பிரமாதமான பிரச்னை இப்போது கிளம்பியிருக்கிறது.

இந்திய சர்க்கார் "பதினோராயிரம் அடி போதும்!" என்கிறார்கள்.

"போதாது; தமிழ் மக்கள் மட்டமான ஜனங்கள்; அவர்களுக்குப் பதினாலாயிரம் அடி கொடுத்தால்தான் சரிப்பட்டு வரும்!" என்று ஸ்ரீ எஸ்.எஸ். வாஸன் சொல்லுகிறார்.



தமிழ்நாட்டில் பல வருஷ காலமாக ஸினிமா சீர்திருத்தத்தில் ஈடுபட்டவர்கள் எல்லாரும் ஒரு முகமாக, "தமிழ்ப் படங்களின் நீளம் குறைய வேண்டும்" என்று சொல்லி வந்திருக்கிறார்கள். அப்படிக் குறைப்பதற்கு ஒரு நல்ல சந்தர்ப்பம் வந்திருக்கும் போது, தென்னிந்திய ஸினிமா வர்த்தக சங்கத்தின் தலைவர் "இன்னும் 3000 அடி அதிகம் வேண்டும்" என்று கேட்பது பெரிய ஆச்சரியம்.

உயர்ந்த படங்களைக் கொண்டு வந்து நேசத்துக்கே வழிகாட்டுவதற்கு நமது செந்தமிழ் நாட்டைப் போல் சிறந்த நாடு வேறு கிடையாது. பட முதலாளிகள் சிலர் தங்களுடைய மட்டத் தன்மையைத் தமிழ் மக்களின் மேலே ஏற்றுகிறார்கள். ஏற்றி, "தமிழ் மக்கள் மட்டப் படத்தை விரும்புகிறார்கள்" என்று பழி சுமத்துகிறார்கள்.

நல்ல தமிழ்ப் படத்துக்கு எப்போதும் தமிழ் மக்கள் நல்ல ஆதரவு கொடுத்துத்தான் வந்திருக்கிறார்கள். படித்தவர்கள் மட்டுமல்லாமல், 'பாமரர்'களும் சிறந்த ரஸிகத் தன்மையுடன் நல்ல தமிழ்ப் படங்களை ஆதரித்திருக்கிறார்கள். அவர்கள் மேல் "மட்டமானவர்கள்" என்ற பழியைச் சுமத்துவது பெரும் பாவம்; நன்றி கெட்ட தன்மை.

தமிழ்ப் படங்கள் 11,000 அடிக்குள் வருவதால் தீமை கிடையாது, ரொம்ப நன்மை உண்டு என்பது என்னுடைய கட்சி.

நல்ல காற்றோட்டமில்லாக் கொட்டகைகளில் இரண்டு மணி நேரத்துக்கு மேல் ஜனங்கள் அடைந்து கிடப்பது ரொம்பவும் சுகாதாரக் கேடு; கண்ணுக்குத் தீமை விளைவிப்பது.

"அமெரிக்கர்கள் 7000 அல்லது 8000 அடிக்குள் நன்றாக ரஸிக்கக்கூடிய உயர்தரப் படங்களைப் பிடிக்கிறார்கள் என்பதைக் குறிப்பிட விரும்புகிறோம்" என்றும்,

"குறைந்த நீளப் படங்களினால் மற்றொரு அனுகூலமும் உண்டு. மற்ற நாடுகளைப் போல் இங்கேயும், முக்கிய புரோகிராமுடன் செய்திப் படம், கார்ட்டூன் படம், கல்விப் படம் போன்ற சில்லறை அம்சங்களையும் காண்பிப்பது சாத்யமாகும். மேற்சொன்ன சில்லறைப் படங்கள் தயாரிப்பதால் இந்திய ஸினிமா படத் தொழில் மேலும் விஸ்தரிக்க வழி ஏற்படும்" என்றும் ஜூன் மீ 1[உ] "ஹிந்து" தலையங்கத்தில் எழுதியிருந்தது.

ஸ்ரீ எஸ். எஸ். வாஸனுடைய பேச்சினால், பதினோராயிரம் அடி போதும் என்ற அபிப்பிராயந்தான் உறுதிப்பட்டிருக்கிறது. படத்தை மட்டமாக எடுப்பதற்காகவே இன்னும் 3,000 அடி வேண்டுமென்று கேட்பது மகா அவமானம் என்றே தோன்றுகிறது.

- "தமிழ்மகன்" என்ற புனைபெயரில் அமரர் கல்கி எழுதிய கட்டுரையிலிருந்து சில பகுதிகள்.

## சிவகவி பாட்டுக்கள்

ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதரின் "சிவகவி"ப் பாட்டுக்கள் அடங்கிய GE. 6150, GE. 6106, இசைத் தட்டுக்கள் வரப் பெற்றோம். பாகவதரின் அபூர்வமான சுக பாவமுள்ள சாரீரத்தின் பூரண இனிமையும் இந்த இசைத் தட்டுக்களில் வெளியாகியிருக்கின்றன. "வள்ளலைப் பாடும் வாயால்" என்று ஆரம்பிக்கும் செந்தருட்டிப் பாட்டு மிகவும் சிறந்து விளங்குகிறது. "சிவகவி" படம் பார்க்காததினால் சாஹித்யத்தின் பொருத்



தம் அவ்வளவாக விளங்கவில்லை. ''மார வம்போ நீன் விழியோ மதுர காவமோ?'' என்று எதைப் பார்த்து ஆச்சரியப்படுகிறார் என்று தெரியவில்லை.

இரு குரலில் கேட்கும் நீர்க்கப் பாட்டு நாலு ராகங்களில் வெகு அழகாய் அமைந்திருக்கிறது. ஆனால், ''மல்லிகைப் பூங் கொடி குந்தல வராளி'' என்றால் என்ன? ''எது குலாம் போதிலும்'' என்பதற்கு என்ன அர்த்தம்? - அந்தப் பழனி ஆண்டிக் கப்பனைத்தான் கேட்க வேண்டும்!

மொத்தத்தில் இரண்டு இசைத் தட்டுகளும் கேட்பதற்குக் கர்ணாமிர்தமாயிருக்கின்றன.

– ''கேட்டுப் பாருங்கள்'' பகுதியில் விமர்சனம்.

## தப்பு யார் மேல்?



ராமு (கிட்டுவைக் கிள்ளிக் கொண்டே) :- ஏண்டா நீ கணக்கைத் தப்பாகப் போட்டாய்? உன்னைப் பார்த்துக் காப்பி அடித்ததினால் எனக்கும் அடி விழுந்ததே!

## எப்போ போவாரோ?



விருந்தாளி (நண்பர் வீட்டில் வெகு நாள் தங்கிய பிறகு வீட்டுக்காரரைப் பார்த்து): நாளைக்கு ரயில் எத்தனை மணிக்குத் தெரியுமோ?

வீட்டுக்காரர் (பெருமூச்சு விட்டு) : ரயில் புறப்பட இன்னும் 16 மணி 30 நிமிஷம் 2 வினாடி பாக்கி இருக்கிறது!



''என் சம்சாரம் தயங்கவே மாட்டா; எப்பவும் எடுத்தெறிஞ்சு பேசிடுவா!''

''அதை நீ சொல்லித் தெரியணுமா? அதான் உன் உடம்பு பூரா அங்கங்கே வீங்கியிருக்கே!''

- அம்பை தேவா.



''செய்யாத தவறுக்காகத் தண்டனை அனுபவிக்க வேண்டுமா, டீச்சர்?''

''வேண்டாம், ஏன் கேட்கிறே?''

''சரி... சரி... இன்னிக்கி நான் ஹோம் வொர்க் பண்ணலை!''

- வி. ஆனந்தராஜ்.

''நாளைக்கு நம்ம பெண்ணைப் பார்க்க வர்றவங்க ரொம்ப எதிர்பார்ப் பாங்க போலிருக்கு....''

''எப்படி சொல்றீங்க?''

''பெண் பார்க்கிறதுக்கே வீடியோ கவரேஜ் பண்ணச் சொல்றாங்க!''

- வி. கி. குமார்.



# எம்.ஜி.ஆர். கொடுத்த

நானாக வலியச் சென்று ஒரு குறிப்பிட்ட பாத்திரத்தில் நடிக்க வாய்ப்புக் கேட்டுப் பெற்றது 'ஒளி விளக்கு' படத்தில் மட்டும்தான்.

அப் படத்தில் இடம்பெற்ற பாடல்கள் எல்லாமே சூப்பர் ஹிட்! குறிப்பாக, 'இறைவா உன் மாளிகையில்' என்ற பாட்டு எம்.ஜி.ஆர். நோய்வாய்ப்பட்டிருந்த சமயத்தில் தமிழ்நாடு முழுவதும் எதிரொலித்தது. தமிழக மக்கள் அனைவருமே அந்த மாமனிதர் பூரணமாகக் குணமடைய வேண்டும் என்று பிரார்த்தனை செய்தனர். பட்டி தொட்டிகளிலுள்ள சினிமா அரங்குகளிலெல்லாம் 'இறைவா உன் மாளிகையில்' பாடல் காட்சி திரையிடப்பட்டது.

அவர் குணமடைந்து திரும்பியதற்குக் காரணம் மக்களின் பிரார்த்தனையும், மக்களுக்காகத் தான் வாழ வேண்டும் என்கிற அவருடைய 'வில் பவரும்'தான் என்பதில் சந்தேகமேயில்லை.

'பூல் அவர் பத்தர்' என்கிற இந்திப் படம்தான் தமிழில் ஒளிவிளக்காக எடுக்கப்பட்டது. அதில் மீனாகுமாரி நடித்த பாத்திரத்தைத் தமிழில் நான் நடிக்கக் காரணமாய் இருந்தவர் எம்.ஜி.ஆர். அவர்கள் தான்.

எம்.ஜி.ஆர். படங்களைப் பொறுத்த வரை எல்லா விஷயங்களிலும் அவரைக் கலந்தாலோசித்துத்தான் முடிவுகள் எடுப்பார்கள். அதனால் நேரடியாக எம்.ஜி. ஆருக்குப் போன் செய்தேன். சுற்றி வளைக்காமல் 'பட்'டென்று என் விருப்பத்தைத் தெரிவித்தேன்.

''அந்த காரெக்டரில் யாரை நடிக்க வைப்பது என்று நானும் யோசித்துக் கொண்டே இருந்தேன். நீங்களே போன் செய்ததில் மிக்க மகிழ்ச்சி'' என்று சொன்ன எம். ஜி. ஆர். அதே மூச்சில், ''நீங்கதான் அந்த காரெக்டர்ல நடிக்க றீங்க...'' என்றும் தீர்மானமாகச் சொல்லி விட்டார்!

ஒளி விளக்கு நான் நடித்த படங்களிலேயே எனக்கு மிகவும் பிடித்தவற்றுள் ஒன்று. படத்தின் இயக்குனர் சாணக்கியா, என்றாலும் கூட, தயாரிப்பாளரான எஸ். எஸ். வாசனும் அவர் மகன் எஸ்.எஸ். பாலனும் இந்தப் பட விஷயத்தில் காட்டிய அபார அக்கறை காரணமாக, ஒளிவிளக்கு படம் கதை, நடிப்பு, இசை, மற்றும் டெக்னிகல் விஷயங்களிலும் சிறப்பாக அமைந்து வெளிவந்தது.

ஒளிவிளக்கு படப்பிடிப்பின் போது ஒரு மறக்க முடியாத நிகழ்ச்சி நடைபெற்றது. படம் எடுத்து முடிக்கப்பட்டவுடன் பிரத்யேக காட்சியொன்றுக்கு ஜெமினி ஸ்டுடியோவில் ஏற்பாடாகியிருந்தது. படம் பார்த்து விட்டுக் கிளம்பும் போது எம்.ஜி.ஆர். தம் காரில் இருந்த ஒரு எமர்ஜென்ஸி விளக்கை எனது காரில் தாமே எடுத்து வைத்தார்.

இதற்கான காரணம் என்னவென்று புரியாமல் நான் குழம்புவதை உணர்ந்து, ''ஒளிவிளக்கு படத்தில் மிகச் சிறப்பாக நடித்திருக்கும் உங்க திறமையைப் பாராட்டி இதுவரைக்கும் என் காரில் நான் வைத்திருந்த இந்த ஒளிவிளக்கை உங்களுக்குப் பரிசாகக் கொடுக்கிறேன்'' என்றார்.

அளவிட முடியாத ஆனந்தத்தில் கண் கலங்கிய நான், ''உங்களைப் போன்ற ஒரு மாமனிதரிடமிருந்து இப்படியொரு பரிசைப் பெறுவது எனக்குக் கிடைத்த பெரிய கௌரவம்'' என்று நன்றி கூறினேன். என் நடிப்புக்கு எத்தனையோ பரிசுகள் கிடைத்திருந்தாலும், எம்.ஜி.ஆர். அளித்த பரிசு எனக்கு மாபெரும் பொக்கிஷம்!

எத்தனையோ 'பவர் கட்' தினங்களில் என் வீட்டின் 'ஒளிவிளக்காக' இருந்தது எம்.ஜி.ஆர். கொடுத்த பரிசு. ஒரு சமயம் அது ரிப்பேர் ஆன போது, சரிசெய்து வருவதற்காகப் பணத்துடன் ஒரு பணியாளரிடம் கொடுத்தனுப்பினேன். அது ரிப்பேர் ஆனதே என் மனதுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. இந் நிலையில் விளக்கை எடுத்துச் சென்றவன் திரும்பவேயில்லை என்னும் போது என் மனநிலை எப்படி இருந்திருக்கும்!

மற்ற வேலைக்காரர்களைக் கொண்டு எவ்வளவோ விசாரித்த போதும் விளக்கையோ அதை எடுத்துச் சென்ற பணியாளரையோ கண்டுபிடிக்கவே முடியவில்லை.

இது நடந்து ஏழெட்டு வருடங்கள் கழித்து ஒருநாள் பாண்டி பஜாரில் ஷாப்பிங் செய்யப் போன போது, அந்தப் பணியாளர் என் கண்ணில் பட்டார். உடனடியாக அவரை அடையாளம் கண்டுகொண்டு பாண்டி பஜார் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கூட்டிப் போனேன். இன்ஸ்பெக்டரிடம் புகார் கொடுத்தேன். அவர்களும் உடனடியாக விசாரிக்க, விலை மதிக்க முடியாத அந்த பொக்கிஷத்தை அப் பணியாளர் ஒரு சைதாப்பேட்டை பழ வியாபாரியிடம் முந்நூறு ரூபாய்க்கு விற்று விட்டதாக அறிந்தேன்! உடனே இன்ஸ்பெக்டரிடம் ஆயிரம் ரூபாய் கொடுத்து, பிடிபட்டவனின் உதவியுடன் வியாபாரியைக் கண்டுபிடித்து விளக்கைத் திரும்பப் பெற்றுத் தருமாறு கேட்டுக் கொண்

# பரிசு!

டேன்.

இன்ஸ்பெக்டர் பணத்தை வாங்க மறுத்தார். மிகவும் வற்புறுத்தி விளக்கை விலை கொடுத்து வாங்கியவருக்கு அந்த நஷ்டத்தை ஈடுசெய்யப் பணம் தேவைப்படும் என்று சொல்லி அனுப்பினேன்.

அன்றைய தினமே அந்த விளக்கு திரும்பி வந்தது. பணமும் திரும்பி வந்தது! எம். ஜி. ஆர். எனக்குக் கொடுத்த பரிசு என்று தெரிந்ததும் அந்த வியாபாரி பணம் வாங்கிக் கொள்ள மறுத்து விட்டாராம்!

## சௌகார் ஜானகி



* ஒளி விளக்கு

எம்.ஜி.ஆர். சம்பந்தப்பட்ட மற்றொரு நிகழ்ச்சி 1962 இல் நடந்தது. மாடப்புறா என்ற படத்தில் அவருடன் ஜோடியாய் நடிக்க நான் ஒப்பந்தம் செய்யப்பட்டேன். முதல் நாள் படப்பிடிப்பு. நான் செட்டுக்குப் போன சிறிது நேரத்துக்கெல்லாம் எம்.ஜி.ஆர். வந்து சேர்ந்தார். எல்லாரையும் போல் நானும் அவருக்கு எழுந்து நின்று வணக்கம் கூறினேன். படப்பிடிப்பு தொடங்கி, சில காட்சிகள் எடுக்கப்பட்டன.

ஆனால், மறுநாள்... அப் படத்திலிருந்து நான் நீக்கப்பட்டிருந்தேன்...!

(தொடரும்)

படம் உதவி :
ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

# வெற்றியடைந்த ஹெக்டே!



* தேவகௌடா : இணைந்த கட்சியின் எதிர்காலத் தலைவர்



* ஹெக்டே : இணைப்பில் வெற்றி

படம் : கோவிந்த்

கல்கி பேட்டியில் சொல்லியிருந்தது போல் ஜனதா தளம், சமாஜ்வாடி ஜனதாதளம் இரண்டையும் இணைக்கும் முயற்சியில் வெற்றி கண்டு விட்டார் ஹெக்டே. கர்நாடக அளவில் இரண்டு கட்சிகளும் இணைவதற்கான எல்லா ஏற்பாடுகளும் முடிந்து விட்டன. இன்னும் ஒரு வாரத்திற்குள்ளாக இணைப்பு விழா பிரம்மாண்ட அளவில் நடைபெறுமென்று தெரிகிறது. தற்போதைய ஏற்பாட்டின்படி ஜனதா தளத்தின் மாநிலத் தலைவரான ஜே.எச். பட்டேலே சில மாதங்களுக்குத் தலைவராக இருப்பார். பின்னர் எஸ்.ஜே.பியைச் சேர்ந்த தேவ கௌடா தலைவர் பொறுப்பு ஏற்பது என்பது முடிவு. சமீபத்தில் நடந்து முடிந்த இடைத் தேர்தலின் முடிவு ஜனதா தளத்தை மூன்றாவது இடத்திற்குத் தள்ளி விட்டு விட்டது. இந்தச் சரிவை ஹெக்டே - தேவ கௌடா கூட்டு எந்தவிதத்தில் சரிக்கட்டப் போகிறது என்பதைப் பார்க்க வேண்டும்.

மொய்லி - எஸ்.எம். கிருஷ்ணா மோதல் கொஞ்சம் தணிந்திருக்கிறது. இப்போதைய நிலையில் வரம்பு மீறிப் போவதாக எந்தச் செயலும் இருக்க வேண்டாம் என்று, அதிருப்தியாளருக்கு மேலிடம் தெரிவித்திருப்பதாகத் தகவல். அரசியல் நெளிவுசுளிவுகள் தெரிந்த கிருஷ்ணா, திடீரென்று அதிகம் பேசாமல் ஒதுங்கிக் கொண்டார். இப்போது அதிருப்தியாளர் அணிசேர்ப்பது கூட்டங்கள் நடத்துவது, அறிக்கைகள் விடுவது, நிருபர்களைச் சந்திப்பது என்று களத்தில் நிற்பவர் ராஜசேகர மூர்த்தி. ''எஸ்.எம். கிருஷ்ணா சரியான தந்திரக்காரர். விவகாரத்தை ஆரம்பித்து வைத்து விட்டு, சமயம் பார்த்து ஒதுங்கிக் கொண்டார். எதிர்நடவடிக்கை அது இதென்று ஒருவேளை வந்தால் பலியாகப் போவது முன்னே நிற்கும் ராஜசேகரமூர்த்திதான்'' என்றார் ஒரு பார்வையாளர். இதற்கிடையில் அமைச்சர்கள் மத்தியில் மொய்லி தம்முடைய அணுகுமுறையை மாற்றிக் கொண்டுள்ளார் என்று தோன்றுகிறது. விவகாரங்களில் தங்களையும் முதல்வர் கலந்தாலோசிக்கிறார் என்ற மகிழ்ச்சி அமைச்சர்கள் மத்தியில் நிலவுகிறது. அமைச்சரவைக் கூட்டம் நடந்த போது எஸ்.எம். கிருஷ்ணாவும் மொய்லியும் சந்தித்துப் பேசி சுமுகமான நிலைமைக்கு வந்து விட்டதாகச் செய்திகள் வந்தன. ஆயினும் பனிப்போர் தொடர்கிறது என்பதை அவர்களுடைய அடுத்தடுத்த நிருபர் கூட்டங்கள் உணர்த்தின.

**மொய்லி:** இப்போதைய நிலைமை 'டெல்லி டாக்டர்கள்' தலையிட வேண்டும் என்ற அளவுக்கு இல்லை; உள்ளூர் நாட்டு மருந்தே போதுமானது.

**எஸ்.எம். கிருஷ்ணா :** நாட்டு மருந்து கொடுக்கப்பட்டிருக்கிறது. முடிவு என்னாகிறதோ பொறுத்திருந்து பார்க்கலாம்.

**மொய்லி :** பந்து என்னுடைய கோர்ட்டில் இல்லை. என் வசமிருந்த பந்தை அடித்து விட்டேன். எங்கே விழுந்ததோ தெரியாது.

**எஸ்.எம். கிருஷ்ணா :** எனக்கும் தெரியவில்லை. எல்லாரும் சேர்ந்து தேடிப் பார்ப்போம். பந்து எப்படியும் கிடைத்து விடுமென்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது!

- பெர்னாண்டஸ்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

STERED No. M. 4382
ered as Newspaper in Sri Lanka

# விலை குறைவாக இருந்தால் மட்டும் போதுமா?



"போதாது. தாயாகவும், டாக்டராகவும் இருப்பதால் நான் கட்டாயமாகக் கூறுவேன். தாய்ப் பாசத்தையும், அதன் சந்தோஷத்தையும் விலை என்னும் தராசிலே நிறுக்கவே முடியாது. ஒரு தாயின் சந்தோஷம் தனது குழந்தைக்கு அனைத்திலும் உன்னதமானதை அளிப்பதில்தான் அடங்கி இருக்கிறது. உன்னதம் என்றால், விப்ரோ பேபி ஸாஃப்ட் சோப். இதிலே குழந்தையின் தளிர் மேனிக்கு அவசியமான பி.எச். பேலன்ஸ் சரியான அளவிலே உள்ளது. சருமத்திற்கு கேடு ஏற்படுத்தும் உட்பொருளே கிடையாது. சருமத்தை மென்மையாக வைக்கும் லனோலினும் உள்ளது. இத்தனை சிறப்புகள் இருந்தும் விலை 6 ரூபாய் குறைவு. இனியும் அதிக விலை கொடுத்து இதர சோப்புகளை வாங்குவீர்களா ?"

விப்ரோ
பேபி ஸாஃப்ட்
சோப்

WIPRO
BABY SOFT
SOAP

ரூ.13/-
75 கிராம்

குழந்தைக்கு தூய்மையானது
உங்களுக்கு சிக்கனமானது

everest/92/WL/234-Tm